
கல்கி
KALKI 20.9.92 ரூ. 3.00
கண்கவர் பிளாஸ்டிக்கால்
மண்ணுக்கு அபாயமா?

# குழந்தைகளுக்கு விஞ்ஞானத்தில் நல்ல பயிற்சிக்கான முதற்பாடம்.

பள்ளித் தேர்வுகள் இத்தனை கடினமாக இருக்கும் என நினைத்தும் பார்த்திருக்க மாட்டீர்கள். விஞ்ஞானத் திலும், கணக்கிலும் நல்ல மதிப்பெண் பெற உங்கள் குழந்தை மிக கஷ்டப்பட்டு படிக்க வேண்டும்.

அவனுக்குத் தேவை முட்டை. முட்டையிலே ஃபாஸ்ஃபரஸ் செறிந் துள்ளது. இது உங்கள் குழந்தையை சுறுசுறுப்பாக சிந்திக்க வைக்கும். அவன் வளர்ச்சிக்கு அத்தியாவசியமான புரதச் சத்தும் இதிலே நிறைந்துள்ளது.



ஸ்க்ராம்பிள்டு எக் : அத்துடன் 30 - க்கும் மேலான சமையல் குறிப்புப் புத்தகம் இலவசமாகப் பெற எழுதவும்: என் ஈ சி சி E-13/14, மார்க்கெட் கோ-ஆபரேட்டிவ் ஹவுஸிங் சொஸைட்டி S. No. 569/AB ... புனே - 411 037.

ஆரோக்கியமான இரத்தத்திற்குத் தேவையான இரும்புச்சத்து நிறைந் துள்ளது. உங்கள் குழந்தைக்கு நோய் எதிர்ப்புச் சக்தியை வளர்ப்பதற்கு வைட்டமின் 'ஏ', நல்ல ஜீரண சக்திக்கு வைட்டமின் 'பி' குரூப், வலுவான எலும்புகளுக்கு வைட்டமின் 'டி' ஆகியவை அடங்கியுள்ளது.

நித்தம் ஒரு முட்டை. நினைவில் நிற்கும் உணவு.

**எந்த நாளும் சிறந்தது. முட்டை உண்ண உகந்தது.**

**NECC**

நேஷனல் எக்
கோ-ஆர்டினேஷன் கமிட்டி

Enterprise/NECC/135/92 Tm

# சின்னச் சின்ன ஆசைகள்!

ரோஜா படத்தில் வருகிறது பாடல். அதுபோல, உங்களுக்குச் சின்னச் சின்ன ஆசைகள் ஏதாவது உண்டா? சில பிரபலங்கள் கூறிய பதில்கள் :



கவிஞர் நா. காமராசன் :

எனக்கு சமுத்திரத்து மீனாய் வானைத் தொட ஆசை;

சரித்திரமாய் நானே மாறிவிட ஆசை.



பட்டுக்கோட்டை பிரபாகர் :

ரோலர் ஸ்கேட்டிங்கும், நீச்சலும் கற்றுக் கொள்ள ஆசை;

வாசகனாக மாறி, என் கதைகளை, சஸ்பென்ஸ் உடையாமல் நான் படிக்க வேண்டும் என்று ஆசை.



டெல்லி கணேஷ் :

பாரதியுடன் கைகோத்து நடந்து செல்ல ஆசை;

குடும்பத்துடன் கடற்கரையில் ஓடி விளையாட ஆசை.



எஸ்.வி. ரமணன் :

காலில் செருப்பில்லாமல், இமயமலையில் கால்கள் ஜில்லிட நடந்து செல்ல ஆசை.



அனுராதா ரமணன் :

பேனாவாகவே மாறி, உணர்ச்சிகளை எழுத்தில் கொட்ட ஆசை;

அமெரிக்காவிலிருந்து என் மகள் எழுதும் கடிதங்களைத் திரும்பத் திரும்பப் படிக்க ஆசை.



ஓவியர் அரஸ் :

மழை தூறிக் கொண்டே இருக்க, ஜன்னல் ஓரம் உட்கார்ந்து கொண்டு, எதையாவது கொறித்த படியே நண்பர்களுடன் அரட்டை அடித்துக் கொண்டு நெடுந்தூரம் ரயில் பயணம் செய்ய ரொம்ப ஆசை. கதர் வேட்டி, கதர் சட்டையணிந்து, மனைவியுடன் கோவிலுக்குப் போய் ஆண்டவனைக் கும்பிட ஆசை.

தொகுப்பு : எம். பாரதி



★ குதிரை களுடன் தென்னவன்

# திருமண ஊர்வலத்திற்குத் தென்னவன் குதிரைகள்

**''குதிரைகள் சாப்பிடாட்டி எனக்கும் சாப்பாடு இறங்காது'' என்கிறார் தென்னவன்.**

பூந்தமல்லி சாலையில் ரிப்பன் கட்டடத்துக்கு எதிர்ப்புறம் குதிரை லாயம் ஒன்று...

அந்த மாநகராட்சி லாயத்தை முழுவதுமாகப் பயன்படுத்திக் கொள்பவர் 23 வயது தென்னவன். கறுப்பு அரை நிஜாரும் கட்பனியனும் அணிந்து கொண்டு, குதிரைக்குக் கொள்ளும், தவிடும், கேரட்டும் கொடுத்துக் கொண்டிருந்தவர், நம்மைப் பார்த்ததும், உதவியாளரிடம் வேலையைக் கொடுத்து விட்டு வருகிறார்.

குதிரை லாயத்தின் மணத்தில்(!) நாம் சங்கடப்படுவதைப் புரிந்து கொண்டு ''கொஞ்ச நேரத்திலே பழகிப் போய் விடும்'' என்று மரக்கட்டிலில் அமரச் சொல்கிறார்.

தென்னவனின் தாத்தாவுக்கு அப்பா தொப்பை பிள்ளையார். எண்பது வருடங்களுக்கு முன்னால் குதிரை வண்டி ஓட்டிக் கொண்டிருந்தாராம். அவரைத் தொடர்ந்து தாத்தா குப்புசாமியும் அதே தொழில்தான். ''ஆனால் தாத்தாவின் காலத்தில், ஆட்டோக்கள், ரிக்ஷாக்கள் என்று வந்து விட்டபடியால் குதிரை வண்டிக்குக் கிராக்கி மிகக் குறைந்து போனது. அதனால் தாத்தா, தொழிலைக் கொஞ்சம் மாற்றிக் கொண்டார். குதிரைகளைப் பராமரித்து, சினிமா ஷூட்டிங், மார்வாடிகள் கல்யாணம் ஆகியவற்றுக்கு வாடகைக்குக் கொடுத்தார். சாரட் வண்டியும் அவர் உருவாக்கியதுதான். அவர் துவங்கிய தொழிலைத்தான் நான் தொடருகிறேன்'' என்கிறார் தென்னவன்.

தென்னவனுக்கு ஏழு வயதாகும்போதே குதிரையேற்றத்தைக் கற்றுக் கொடுத்தவர் தாத்தாதானாம். ''எங்க வீடு அப்போ பக்கத்தில் பெரியமேட்டில் இருந்தது. தினமும் கார்ப்பரேஷன் பள்ளிக்குப் போய் விட்டு, மாலை இங்கே வந்து விடுவேன். எட்டாவதுக்கு மேல் படிக்கவில்லை. என் அப்பா கார்ப்பரேஷனில் வேலை செய்து கொண்டிருந்தபடியால் இந்தத் தொழிலுக்கு வரவில்லை.''

சின்ன வயதில் கில்லி விளையாடும் போது கண்ணில் அடிபட்டதால் தென்னவனுக்கு இடது கண் பார்வை கிடையாது. 17

வயதிலேயே கல்யாணம் செய்து கொண்டு விட்ட இவருக்கு இரண்டு பெண்கள். குதிரைகளையும் குழந்தைகளாக நேசிக்கிறார்.

தென்னவனிடம் இப்போது ஐந்து குதிரைகள், இரண்டு சாரட் வண்டிகள் இருக்கின்றன. சித்ரமாலா, ஜெயமாலா என்றெல்லாம் குதிரைகளுக்குக் கவர்ச்சியாகப் பெயர் வைத்திருக்கிறார். தாத்தா காலத்தில் ஷூட்டிங்குக்குக் குதிரைகளை அனுப்பியது போல் இப்போது தென்னவன் அனுப்புவதில்லை.

சோப், பீடி, சிமெண்ட் கம்பெனிகள் தங்கள் விளம்பரப் படுதாவைத் தென்னவனின் குதிரைகளின் முதுகில் தொங்க விட்டுத் தெருத் தெருவாக அழைத்துச் செல்கின்றன.

பல கல்யாணங்களில் மாப்பிள்ளைகள் ஆரோகணித்து வருவதற்கும் குதிரைகள் வாடகைக்குச் செல்கின்றன.

''1993ம் ஆண்டு நடக்க வேண்டிய கல்யாணத்துக்கு இப்போதே குதிரைகள் புக் செய்துட்டாங்க பாருங்க'' என்று டயரியைக் காண்பிக்கிறார். ''சில முகூர்த்த நாட்களில் எக்கச்சக்க கிராக்கி வரும் - என்னால் முடிந்த வரை செய்து விட்டு, மீதி ஆர்டர்களை இதே தொழிலில் உள்ள, மற்றவர்களுக்குப் பிரித்துக் கொடுத்து விடுவேன்'' என்கிறார் தென்னவன்.

குதிரைகள் தவிர சாரட் வண்டிக்கும் நல்ல கிராக்கியாம். மார்வாடிகள் மற்றும் பல ஹிந்து குடும்பங்களிலும், குதிரைகளையும், சாரட் வண்டிகளையும், மாப்பிள்ளை, பெண் அழைப்பு போன்றவற்றிற்குப் பயன் படுத்துகிறார்கள்.

இது தவிர அரசியல் கட்சிகள், பொதுக் கூட்டத்திற்குத் தலைவர்களை ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து மேள, தாளத்துடன் சாரட் வண்டியில் அழைத்து வரும் பழக்கமும் உருவாகி இருக்கிறதாம். அழகு திருநாவுக்கரசு, செங்கோட்டையன், கோபால்சாமி, மு. க. ஸ்டாலின் ஆகியோர் தென்னவனின் சாரட் வண்டி சவாரியை அனுபவித்தவர்கள்.



* குதிரை லாயம்

குதிரைகளை வாடகைக்கு அனுப்பும் போது முதுகில் பளபளா வெல்வெட் துணி, காதுகளில் காகித மலர்க் கொத்துக்கள் ஆகியவற்றைப் பொருத்தி அலங்கரிக்கிறார். இதுபோல வண்டிக்கும் ஜிகினாப் பூ அலங்காரம் உண்டு. வருடத்துக்கு இரண்டு தடவை, குதிரைக்குப் போடும் சேணம், லகான் ஆகியவற்றை மாற்றுகிறார்.

குதிரைகளுடன், சிப்பாய் வேடம் தரித்த ஆட்களை அனுப்புகிறார். குதிரைகள், சாரட் வண்டி பராமரிப்பு ஆகியவற்றுக்கு மாதம் ஐந்தாயிரம் செலவாகிறதாம். சுமார் 20 பேர் தென்னவனை நம்பிப் பிழைக்கிறார்கள். ஒரு மணி நேரத்துக்கு இத்தனை ரூபாய் என்று உபயோகத்துக்கு ஏற்பக் கட்டணம்.

* சாரட் வண்டியில்



''கடவுள் புண்ணியத்தில் வருமானத்துக்கு ஒன்றும் குறைவில்லை. ஆடி, மார்கழி போன்ற மாதங்களில் கொஞ்சம் பிஸினஸ் 'டல்'லாக இருக்கும். அதையும் சமாளித்து விடுவேன். புதிதாகக் குதிரை வாங்க வேண்டுமென்றால் வட்டிக்குக் கடன் வாங்கி அடைத்து விடுவேன்'' என்று கூறுபவர், ''குதிரை வாங்க வங்கியில் கடன் தருவாங்களா?'' என்று ஆர்வத்துடன் விசாரிக்கிறார்.

''20 வருடங்களுக்கு முன்பு வரை குதிரை லாயத்துக்கு, மாநகராட்சியிடம் வாடகை கட்டி வந்தோம். அப்புறம் எதுவும் கட்ட வில்லை. ஆனால் பிரச்னை ஏதும் இல்லை'' என்கிறார் தென்னவன்.

கொட்டகைக்குச் சிறிய ரிப்பேர்களை இவர் தம் செலவிலேயே பார்த்து விடுவாராம். எம்.ஜி.ஆர். குதிரை மேல் அமர்ந்திருக்கும் போட்டோவும் (''நம்ம குதிரை தான் ஸார்'') தாத்தா குப்புசாமியின் படமும், லாயத்தில் மாட்டப்பட்டிருக்கின்றன.

நோய் வந்தால் தென்னவனின் குதிரைகள் கால்நடை ஆஸ்பத்திரிக்குச் செல்வதில்லை. அசுவ சாஸ்திரம் என்ற புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளபடி நாட்டு மருந்துகளைக் கொடுக்கிறார்.

குதிரையின் ஆயுள் அதிகபட்சமாக 35 வருடங்கள். அவை முன் இரண்டு கால்களை உதைத்துக் கொண்டிருந்தால் பசி என்று அர்த்தமாம். காது மடல்களை வேகமாக ஆட்டினால் கோபமாம். நின்று கொண்டேதான் தூங்கும். காலையிலும் இரவிலும், கொள்ளு, தவிடு, கேரட், மஹியம் புல், தண்ணீர் இதுதான் குதிரைகளுக்கு ஆகாரம். ''குதிரைங்க சாப்பிடாட்டி எனக்கும் சாப்பாடு இறங்காது ஸார்'' என்கிறார் தென்னவன்.

– ஸ்ரீநிவாசன்

படங்கள் : ராஜன்



புகைப்படம் : அமிர்தம்




# கார்பாலிக் அமிலத்தில் குடித்தனம்!

!! ஒரு மைல் நீள மின்னலில் உள்ள மின்சாரத்தைக் கொண்டு ஒரு மில்லியன் மின்சார பல்புகளை எரியச் செய்யலாம்.

!! முதன் முதலில் கை வெடிகுண்டைத் தயாரித்துப் பயன்படுத்தியவர் - 1230-ல் மங்கோலிய மன்னர் குப்ளா கான்.

!! சராசரி கிருமிகள் அனைத்தையும் அழிக்கக்கூடிய எதிரி கார்பாலிக் அமிலம் தான். மற்ற கிருமி நாசினிகளின் வீர்யத்தைக் கார்பாலிக் அமிலத்துடன் ஒப்புநோக்கியே நிர்ணயிக்கிறார்கள். எனினும் கார்பாலிக் அமிலத்திலேயே குடித்தனம் நடத்தும் கிருமிகளும் உள்ளன.

!! நம் விழித் திரை சுமார் 1 சதுர அங்குலப் பரப்பு இருக்கும். இதனுள் 137 மில்லியன் செல்கள் உள்ளன. இவை ஒளி வாங்கிகளாகச் (light sensitive) செயல்படுகின்றன. 130 மில்லியன் சிவப்பு செல்கள் கறுப்பு - வெள்ளை பார்வைக்கும், ஏழு மில்லியன் 'கோன்' வடிவ செல்கள் நிறங்களை உணரவும் பயன்படுகின்றன.

!! ஓர் அங்குல மழையிலுள்ள நீர் பத்து அங்குல வெண் பனியிலுள்ள தண்ணீருக்குச் சமம்.

!! முட்டைகளை அகல முனை படியும் படி அடுக்கினால் அவை பொரிய மாட்டா. அந்த முனையில்தான் காற்று செல் இருக்கிறது. அதனைப் பளு அழுத்தினால் செல் அழிந்து போகும்.

!! ஒலி, காற்று வெளியில் பயணிப்பதைக் காட்டிலும் ஐம்பது மடங்கு வேகத்தில் ஸ்டீலின் வழியே பயணிக்கிறது.

!! மழை நீரில் வைட்டமின் பி 12 சத்து உண்டு.

!! ஒரு நவீன மனிதனின் சராசரித் தேவைகளையும் சொகுசுத் தேவைகளையும் பூர்த்தி செய்ய, பூமியிலிருந்து ஆண்டொன்றுக்குக் குறைந்தபட்சம் இருபது டன் இயற்கை வளம், கச்சாப் பொருளாக அகழப்பட வேண்டியிருக்கிறது.

!! மக்னீஷியத்தை எரித்தால் அதன் எடை கூடுகிறது. அதன் சாம்பல் கனிமத்தைக் காட்டிலும் கனமாக இருக்கும்.

!! கிடைப்பதற்கு அரிதானாலும்கூட தங்கம்தான் முதன் முதலில் கண்டு பிடிக்கப்பட்ட உலோகம்.

தொகுப்பு :
உதய்லால்




அட, அப்படியா!



● பிளாஸ்டிக்கில் பல வகைப் பொருள்கள்...

போன நூற்றாண்டின் முற்பகுதியில் பில்லியர்ட்ஸ் விளையாட்டின் போது யானைத் தந்தத்தால் தயாரிக்கப்பட்ட பந்துகளையே உபயோகித்து வந்தார்கள். 1868-ல் திடீரென்று தந்தத்துக்குப் பஞ்சம் வந்துவிட்டது. பில்லியர்ட்ஸ் பந்துகள் தயாரிக்க, மாற்றுப் பொருளைத் தேட வேண்டிய அவசியம் வந்து விட்டது. அப்போது ஜான் வெஸ்லி ஹியாத் என்பவர் கற்பூரத்துடன், சில ரசாயனங்களைக் கலந்து செல்லுலாய்ட் என்ற கூட்டுப் பொருளைத் தயாரித்தார். அதிலிருந்து பந்துகள் செய்யப்பட்டன.

இதுதான் பிளாஸ்டிக்கின் ஆரம்பம். அதன்பின் விஞ்ஞானிகள், இரவு பகலாக உழைத்து, பிளாஸ்டிக் என்ற அற்புதப் பொருளின் பல்வேறு பரிணாமங்களை உலகத்திற்கு அறிமுகப்படுத்தினர்.

துவக்க காலத்தில் பல ரசாயனங்களோடு, கரி, சுண்ணாம்பு ஆகியவற்றை எரித்து, அதனுடன் கலந்து பிளாஸ்டிக்கைத் தயாரித்தார்கள். பின்னர் குரூட் ஆயிலைப் பிரித்து பெட்ரோல் நாப்தா போன்றவற்றை எடுப்பது போல், பிளாஸ்டிக்கின் மூலப் பொருளும் நவீன தொழில்நுட்பத்தின் மூலம் கிடைப்பது சுலபமாயிற்று.

இன்று பல்வேறு குணங்களுடைய குண்டு மணிகள் வடிவத்தில் பிளாஸ்டிக் மூலப் பொருள் கிடைக்கிறது. HDPE, LDPE என்று நூற்றுக்கும் மேற்பட்ட மூலப் பொருள் வகைகள் மார்க்கெட்டில் கிடைக்கின்றன.

“நமக்குத் தெரியாமலேயே, நம் வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும் ஊடுருவி விட்டது பிளாஸ்டிக்'' என்கிறார் பிளாஸ்டிக் கிராப்ட் நிறுவனப் பொது மேலாளர் ராமலிங்கம். ஆர்டர் கொடுத்தால் பிளாஸ்டிக்கில் யானையைக் கூட செய்து தரும் வசதியுள்ள நிறுவனம் இது. ''காலையில் பிளாஸ்டிக்கினால் ஆன, பிரஷ்ஷில் பல் துலக்குவதிலிருந்து பார்த்தீர்களானால், இரவில் உறுதியான பிளாஸ்டிக் கட்டிலில் படுத்துத் தூங்குவது வரை தினசரி எல்லா சூழ்நிலைகளிலும் நாம் பிளாஸ்டிக்கோடு உறவாடிக் கொண்டிருக்கிறோம். பிளாஸ்டிக் இல்லாத துறை எது? மருத்துவத் துறை, கணிப்பொறி, வாகனங்கள், வீட்டுச் சாதனங்கள், கடிகாரம், டெலிபோன் என்று சகல விஷயங்களிலும் பிளாஸ்டிக்கின் ஆதிக்கம் கொடிகட்டிப் பறக்கிறது.

''இருதய மாற்று ஆபரேஷனின் போது செயற்கை இருதய - நுரையீரல் இயந்திரம் வேலை செய்யும். அந்த இயந்திரத்தில்

# கண்கவர் பிளாஸ்டிக்கால் மண்ணுக்கு அபாயமா?





★ செயற்கை இருதய நுரையீரல் இயந்திரத்தின் ஒரு பகுதி

ரத்தத்தைப் பெற்று வெளியேற்றும் உபகரணம் (JAR) பிளாஸ்டிக்கினால் ஆனது. உபயோகப்படுத்தி விட்டுப் போட்டு விடும் disposable syringe களில் ஊசியைத் தவிர மற்றப் பகுதிகள் பிளாஸ்டிக்தானே! சுமார் இருநூறு அடி ஆழத்தில் நீர்மூழ்கிக் கப்பலை அப்படியே நிறுத்தி வைக்கச் சிறிய பிளாஸ்டிக் குழல்கள்தான் பயன்படுகின்றன. ஜப்பானில் அச்சு இயந்திரங்கள் கூட பிளாஸ்டிக்கில் உருவாகின்றன! மேல் நாட்டில் காரின் Engine heads கூட பிளாஸ்டிக்கினால் தயாரிக்கத் துவங்கி விட்டார்கள்.

''இப்போது காரில் நாற்பது சதவீதம் பிளாஸ்டிக்கும் விமானத்தில் முப்பது சதவீதம் பிளாஸ்டிக்கும் பயன்படுத்துகிறார்கள். 2000 வருடத்தில் கிட்டத்தட்ட 80 சதவீதம் பிளாஸ்டிக்கினால் ஆன கார்களைத் தயாரிக்க இருக்கிறார்கள். காரின் எடை குறைவதன் மூலம், எரிசக்தியின் உபயோகம் அதிகப்படுகிறது. ஒரு லிட்டருக்கு 24 கி.மீ. ஓடும்'' என்கிறார் ராமலிங்கம்.

கேட்கவே சந்தோஷமாக இருக்கிறது அல்லவா? ''விலை குறைய வாய்ப்பிருக்கிறதா?'' என்ற போது ''முழுவதும் பிளாஸ்டிக்கை உபயோகித்துத் தயாரித்தால் கூட விலை குறைவது சாத்தியமல்ல; காரின் விலை ஏறிக் கொண்டேதான் போகும். அதற்கு வேறு காரணங்கள் உள்ளன'' என்று சொல்கிறார் ராமலிங்கம்.

சென்னை, ரங்கநாதன் தெருவில் பிளாஸ்டிக் பொருட்கள் விற்கும் 'கணேஷ் பிளாஸ்டிக்ஸ்' உரிமையாளர் கணேசன் சொல்கிறார் :

''ஆரம்பத்தில் எங்கள் கடையில் தொறுக்குத் தீனி போன்றவற்றை விற்று வந்தோம். அப்போது அவ்வளவாகச் சூடு பிடிக்காத வியாபாரம், பிளாஸ்டிக் பொருள்கள் விற்க ஆரம்பித்ததும் ஏகமாகச் சுறுசுறுப்பாகி விட்டது... பாரிஸ் கார்னரில் மொத்த வியாபாரிகளிடம் பொருள்களை வாங்கி வந்து விற்கிறோம். ஓரளவு லாபம் சிரமமின்றிக் கிடைத்து விடுகிறது...'' என்கிறார்.

பிளாஸ்டிக்கில் பொட்டு முதல் படுக்கும் பாய் வரை வண்ண வண்ணப் பொருட்களின் அணிவகுப்பு இவர் கடையில். நாம் கணேசனிடம் பேசிக் கொண்டிருந்த சமயத்திலேயே பிளாஸ்டிக்கில் மாவிலைத் தோரணம் வாங்கினார் ஒரு பெண்மணி!

''அசல் மாவிலைக்கு இது ஈடாகுமா?'' என்று கேட்ட போது, ''ஆகாதுதான்; அதனாலென்ன! இதைக் கட்டி வைத்து விட்டால் வாடவே வாடாது. நல்ல நாட்களில் சாஸ்திரத்துக்கு ஓரிரு மாவிலைகளைச் செருகிக் கொண்டால் போதும்'' என்றார் அவர்.

நைட்டிங்கேல் பள்ளியில் ஆசிரியையாகப் பணியாற்றும் கமலா நரசிம்மன் கணேஷ் ஸ்டோர்ஸின் வாடிக்கையாளர். வீட்டு உபயோகத்துக்கு மட்டுமின்றி பள்ளிப் போட்டிகளில் பரிசளிக்கவும் பிளாஸ்டிக் பொருட்களையே வாங்குவதாகக் கூறினார்.

★ கணேசன்



★ கமலா நரசிம்மன்





★ ராமலிங்கம்

ஏய்! அப்பாவோட கட்டில் மேல ஏறி விளையாடினியா?

இல்லியே!

இதபாரு! பொய் சொல்லாதே! படுக்கையெல்லாம் அழுக்கா யிருக்கு!

ஐய்யயோ! நான் அந்தப் பக்கமே போகலம்மா!

இப்ப ஒப்புக்கப் போறியா இல்லியா? நேத்து ரெண்டு பிஸ்கட்டை வேற திருடித் தின்னுருக்கே!

என்ன, அடுக்கிக் கிட்டே போற?

இரு, அப்பாகிட்ட சொல்றேன்!

போ, போய்ச் சொல்லு! விசாரணைக் கமிஷன் வேணும்னாலும் போடு! இந்தப் பூச்சாண்டிக் கெல்லாம் பயப்படமாட்டேன்!

---

**பி**ளாஸ்டிக் சகல விதத்திலும் ஆக்கிரமித்துக் கொண்டு வரும் போது எதிர்த்து நிற்க முடியாமல் சரிந்து விழுந்தவை, மரம், கண்ணாடி, அலுமினியம், சணல் ஆகியவை. ''காடுகளை வளர்ப்போம், மரங்களை வெட்டாதீர்'' என்ற குரல் வலுப்பட்டுள்ளதால் மரங்களின் தேவையை நாம் குறைத்துக் கொண்டே வருகிறோம். நாற்காலி, மேசை, ஜன்னல்கள், கட்டில்கள் என்று பிளாஸ்டிக்கினால் செய்தவை மார்க்கெட்டில் வெற்றிநடை போடுகின்றன. பிளாஸ்டிக்கை ஒப்பிடும் போது கண்ணாடியும், அலுமினியமும் விலை அதிகம். மேலும் கண்ணாடி உடைவதற்கு வாய்ப்பு இருக்கிறது. அலுமினியம் போட்டியில் ஓரளவு தாக்குப்பிடித்துப் பார்த்தது; ஆனால் முடியவில்லை. சணலின் கதை இன்னமும் பரிதாபம். பாலிதின் கோணிகள் வந்தவுடன் சணலின் தேவை அடிபட்டது. உடனே வங்காளத்து விவசாயிகள் தங்கள் பிழைப்பு கெட்டதென்று போராட, சில வகைப் பொருட்களை அனுப்ப, சணல் கோணிகளைத்தான் பயன்படுத்த வேண்டும் என்று அரசு உத்தரவிட்டு விட்டது!

**பி**ளாஸ்டிக்கின் உபயோகம் பல்கிப் பெருகி வருவதனால், இது சம்பந்தப்பட்ட தொழிற்சாலைகளும் அதிகமாகிக் கொண்டே வருகின்றன. இந்தியாவில் சுமார் 25000 பிளாஸ்டிக் சம்பந்தப்பட்ட தொழிற்சாலைகள் இருக்கின்றன. இதில் 95 சதவீதம் சிறிய தொழிற்சாலைகள். பிளாஸ்டிக் பைகள், விதவிதமான குப்பிகள் தயாரிக்கச் சுமார் 40,000 ரூபாய் முதலீடு போதும். இதனால் 'இன்ஜெக்ஷன் மோல்டிங்' முறையில், வீட்டு உபயோகத்திற்கான சிறிய பிளாஸ்டிக் பொருட்களைத் தயாரிக்கும் சிறிய தொழிற்சாலைகள் அதிகமாகிக் கொண்டே வருகின்றன. ஆனால் இவர்களுக்கெல்லாம் பெரிய பிரச்னை மூலப் பொருள்தான். நமது நாட்டிற்குப் பத்து லட்சம் டன் வருடத் தேவை. ஆனால் நம் நாட்டில் கிடைப்பதோ நான்கு லட்சம் டன்கள்தான். மீதியை இறக்குமதிதான் செய்ய வேண்டும். அதற்கும் சுங்கத் தீர்வை அதிகம். உற்பத்தியாளர்கள் என்னதான் குரல் கொடுத்தாலும் அரசு கண்டுகொள்ள மறுக்கிறது.

''மிருதுவானது, எடை குறைவானது, துருப்பிடிக்காதது, உறுதியானது, கவர்ச்சியானது, கலபத்தில் உடையாதது...'' என்று சொல்லிக் கொண்டே போன ராமலிங்கத்தை இடைமறித்து, என்னதான் நீங்கள் பிளாஸ்டிக்குக்கு வக்காலத்து வாங்கினாலும், இரும்பின் இடத்தை அது நிரப்ப முடியுமா? என்று கேட்டோம்.

ஜகா வாங்கினார் ராமலிங்கம். ''கனரக இயந்திரங்கள், மோல்டுகள் (Moulds) செய்வதில் பிளாஸ்டிக்கின் பங்கு சுத்தமாகக் கிடையாது. ஆனால் எதிர்காலத்தில் ஏற்படக் கூடிய தொழில்நுட்ப வளர்ச்சியை நம்மால் கணிக்க முடியாதே!'' என்றார் அவர்.

ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பெனி என்ற அமெரிக்க நிறுவனமும், ஜெர்மானிய நிறுவனமான பேயரும் பிளாஸ்டிக் துறையில் போட்டி போட்டுக் கொண்டு ஆராய்ச்சி செய்து வருகின்றனவாம்.

எனினும் இப்போது மேல்நாட்டுப் பிளாஸ்டிக் உற்பத்தியாளர்களைக் கவலைக்குள்ளாக்கும் விஷயம், சுற்றுப்புறச் சூழல் இயக்கத்தினர் தூக்கியிருக்கும் போர்க் கொடிதான். உடைந்து போன, உபயோகித்து முடிந்த பிளாஸ்டிக் பொருள்கள் மண்ணோடு மண்ணாக மக்கி அழிவதில்லை. இதனால் பூமியின் தன்மை நச்சாகும் என்ற ரீதியில் மேல்நாட்டில் கோஷங்கள் எழுப்பப்பட்டு வருகின்றன.

''இது மிகவும் சர்ச்சைக்குள்ளான விஷயம்'' என்று சொல்கிறார் பேராசிரியர் சங்கரராமன். ''நூற்றுக்கும் மேற்பட்ட பிளாஸ்டிக் மூலப் பொருள்கள் இருந்தாலும் அவற்றை இரண்டுவிதமாகப் பிரிக்கலாம். தெர்மோ பிளாஸ்டிக் மற்றும் தெர்மோ செட். டம்ப்ளர், பக்கெட், குடம் போன்றவற்றைத் தயாரிக்க தெர்மோ பிளாஸ்டிக் வகை மூலப் பொருட்கள் உபயோகிக்கப்படுகின்றன. இவை உடைந்து போனால், பாத்திரம் வாங்க வருபவரிடம் நாம் போட்டு விடுகிறோம். அவற்றை மொத்தமாக எடுத்துக் கொண்டு போய் மறு சுழற்சி (Recycling) முறையில் மீண்டும் பிளாஸ்டிக் மூலப் பொருட்களை உருவாக்க முடியும். இப்போது மறு சுழற்சி செய்யும் ஏகப்பட்ட தொழிற்சாலைகள், சிறிய, பெரிய அளவில் ஏராளமாக இருக்கின்றன.

''வெப்பத்தைத் தாங்கக்கூடிய மின்சார உபகரணங்கள், (switch போன்றவை) சில வகை பிளாஸ்டிக் பைகள் ஆகியவை தெர்மோ செட் என்ற வகை மூலப் பொருளைக் கொண்டு தயாரிக்கப்படுகின்றன. இந்தப் பொருள்களில் இருந்து 'மறுசுழற்சி' செய்து மூலப் பொருளை உருவாக்க முடியாது. இந்த வகைப் பொருட்கள் மண்ணோடு மண்ணாக அழியாதவை. இவை பூமியுடன் இரண்டறக் கலப்பதற்கு நீண்ட காலம் ஆகும். பனி, மழை, வெயில் என்று பல்வேறு தட்பவெப்பங்களில், மீண்டும் மீண்டும் அடிபட்டபின்தான் தெர்மோ செட் வகை பிளாஸ்டிக் பொருட்கள் நிலத்துடன் கலக்கும். ஆனால் இதுவரை உலகில் நடந்த ஆராய்ச்சிகளைப் பார்த்தோமேயானால் பிளாஸ்டிக்கால் நிலப் பரப்பிற்கு நச்சு ஏற்பட்டதாகச் சான்றுகள் இல்லை'' என்கிறார் சங்கரராமன்.

மேலை நாடுகளில் ஏற்பட்டுள்ள விழிப்புணர்ச்சி (சுற்றுப்புறச் சூழல் பற்றியது) நம்மிடையே இன்னும் உதிக்கவில்லை. ''பிளாஸ்டிக் பொருள்கள் மக்கி மண்ணோடு மண்ணாகாமல் பூமியை அசுத்தப்படுத்தும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்... ஆனால் அதற்காக யாரும் பிளாஸ்டிக் வாங்குவதைக் குறைக்கவோ நிறுத்தவோ இல்லை'' என்கிறார் கணேசன். கமலா நரசிம்மனும் அவ் விஷயம் குறித்து அதிகம் கவலை கொள்ளவில்லை என்றே கூறுகிறார்.

பிளாஸ்டிக்கின் அசுர வளர்ச்சியைப் பார்க்கும் போது சுற்றுப்புறச் சூழல் ஆர்வலர்களின் குரல் இந்தியாவில் இப்போதைக்கு எடுபடாது போல்தான் தெரிகிறது. காரணம் ஏழை நாடான இந்தியாவுக்கு மலிவான பிளாஸ்டிக்கின் தேவை அவசியமாக இருப்பதுதான்.

– ப்ரியன்

அட்டையில் : உமா முரளிகிருஷ்ணா
வண்ணப்படம் : யோகா
(நன்றி : கணேஷ் பிளாஸ்டிக்ஸ்)
படங்கள் : யோகா, ராஜன், பாலாஜி

## அடுத்த இதழ்...

### கோவை நகரச் சிறப்பிதழ்...

- சோதனைகளை வென்ற சாதனையாளர்
- என். டி. ஸி. : - தெற்கு மட்டும் எப்படி லாபம் சம்பாதிக்கிறது?
- கோவை மில் ஊழியருக்குத்தான் அதிகச் சம்பளம்
- அன்னாசி இலையிலும் சன்னத் துணி
- நேற்றுவரை நூல் வியாபாரிகள்; இன்று மில் முதலாளிகள்!
- ''கோமதி மாமி, உங்களைத்தான் நம்பியிருக்கிறோம்!''

# நிகரற்ற சேவை

## * 4 இலட்சம் வாடிக்கையாளரின் திருப்தியில் பிரதிபலிக்கும் எமது உருவம்.

எந்த நிறுவனத்தின் வாழ்நாளிலும் திருப்தி மிக்க 4 இலட்சம் வாடிக்கையாளர் என்பது பெரும் சாதனைதான்.

அச்சாதனையை 6 ஆண்டிலேயே எட்டுவது சக்தி பைனான்ஸின் தனிச்சிறப்பினைக் காட்டுகிறது. நாட்டிலேயே முன்னணியில் நிற்கும் நிதி நிறுவனங்களிலே சிறப்பு இடம் பெற்றது - சக்தி பைனான்ஸ். புதுமையும், பிரயோஜனமும் மிக்க பல வகைத் திட்டங்கள், எமது வாடிக்கையாளருக்குக் கண்ணயராத சேவை, அனைத்து அம்சங்களிலும் நுணுக்கமான கவனம், இவைதான் சக்தி பைனான்ஸ் இத்தனை குறுகிய காலத்திலேயே வெற்றி பெற்றுள்ளதன் காரணம்.

வேளாண்மையிலிருந்து, போக்குவரத்துத்துறை, மோட்டார் வாகனத் தொழிலிலிருந்து மலைத்தோட்டங்கள் உள்பட பல துறைகளிலும் முன்னோடியாகவும், முன்னணியிலும் நின்று ரூ. 500 கோடி விற்பனை இலக்கைத்தாண்டிய சக்தி குழுமத்தின் பலம் பக்கபலமாக அமைந்தது. மகத்தான சாதனையால் சக்தி பைனான்ஸ் அடைந்துள்ளது மேம்பட்ட புகழ் என்றால், அந்த உண்மை எமது வாடிக்கையாளரின் அசையா நம்பிக்கையிலே பிரதிபலிக்கிறது.

* டிபாசிட்தாரர்கள், கடன் பெறுவோர், எமது பங்குதாரர்கள் போன்றோர் உள்பட.

UPC:SF:27:92




## சக்தி பைனான்ஸ் லிமிடெட்

தலைவர்: டாக்டர் நா. மகாலிங்கம்
பதிவு அலுவலகம்: 475, டாக்டர் நஞ்சப்பா சாலை, கோயமுத்தூர்-641 018.

---

**சக்தி பைனான்ஸ் - சக்தி வாய்ந்த ரூ. 500 கோடி பெறுமதிப்புள்ள "சக்தி" குழுமத்தின் ஓர் அங்கம்.**


சர்க்கரை


போக்குவரத்து


சோயா


வாகனங்கள்


மலைத்தோட்டங்கள்



குளிர்பானங்கள்


நூற்பாலை


உருக்காலை

நீதி மன்றம்
அவதூறு வழக்குகள்
தரக்குறைவான தாக்குதல்கள்
தி.மு.க. பேச்சாளர்கள்

இந்தப் புல்லட்டுகள் ஏ.கே. 47 ரகம்! விளைச்சல் அமோகமா இருக்கும்!
பஞ்சாப் பயங்கரவாதிகள்

அச்சா, அச்சா! ஜனநாயகப் பயிர், ஓட்டு அறுவடை பிரமாதம்!
பஞ்சாப் முதல்வர் பியாந்த் சிங்

பசங்களா... கம்முனு இருக்க முடியலியா? சண்டை போட்டுத்தான் ஆகணும்னா வீட்டுக்குள்ளேயே போட்டுத் தொலைங்க...
... தெருவுல போயி ஒருத்தரை ஒருத்தர் அடிச்சிக்கிட்டு நிக்காதீங்க!
மூப்பனார்
வாழப்பாடி



# கல்கி



1992
செப்டம்பர் 20
மலர் : 51
இதழ் : 8
ஆங்கீரச
புரட்டாசி 4

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

# மெக்காலே வளர்த்த அடிமைப் புத்தி!

அடிப்படையானதும் முக்கியமானதுமான ஒரு பிரச்னை குறித்துப் பலரும் சிந்தித்துப் பார்க்க மீண்டும் ஒரு வாய்ப்பு அளித்தமைக்காக ஆர். வி. அவர்களுக்கு நன்றி தெரிவிக்கிறோம். சென்னை எம்.ஸிடி. முத்தையா செட்டியார் உயர்நிலைப் பள்ளியின் நூற்றாண்டு நிறைவு விழாவில் கலந்து கொண்டு பேசிய அவர், நாம் இன்னும் பிரிட்டிஷ் காலத்திய மெக்காலே கல்வித் திட்டத்தையே பின்பற்றி வருவது குறித்து வருத்தப்பட்டு, 'சுதந்திர பாரதத்துக்கு ஏற்ற மாற்றங்களைக் கல்வித் திட்டத்தில் கொண்டு வர வேண்டும்' என்று சொல்லியிருக்கிறார்.

ஆர். வி. கூறியதில் புதிய விஷயம் ஒன்றுமில்லை. பல காலமாகப் பல அறிஞர்கள் எடுத்துக்காட்டி வந்துள்ள அம்சம்தான். ஆனால் நம் அரசியல்வாதிகள் இதுகுறித்துச் சிந்திக்கவே இல்லை! அல்லது, 'மக்கள் கல்வி அறிவு பெற்று விட்டால் நமது பதவிக்கு ஆபத்து' என்று எண்ணி னார்களோ என்னமோ, மக்களை அறிவிலிகளாகவே வைத்திருக்கிறார்கள்! இன்று முன்னேறி வருகிற நாடுகள் பல மட்டுமல்ல; நன்கு முன்னேறி விட்ட நாடுகள் கூட கல்விதான் நாட்டை உயர்த்தும் என்று புரிந்து கொண்டு, பட்ஜெட்டில் அதற்கு முக்கியத்துவம் தந்து நிதி ஒதுக்குகின்றன. நிதி ஒதுக்குவதுடன் நில்லாது நாட்டை ஆள்வோர் அத் துறையில் தீவிர கவனமும் செலுத்துகின்றனர். நம் நாட்டில்தான் நிலைமை தலைகீழாக இருக்கிறது. நிதியும் இல்லை; போதிய கவனமும் இல்லை!

ஆர். வி. சுட்டிக்காட்டியது போல் மெக்காலே கல்வித் திட்டம் அன்றைய பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்குத் தேவையான குமாஸ்தா பட்டாளத்தை உருவாக்க ஏற்படுத்தப்பட்டது. இன்றும் அதையே பின்பற்றும் போது தொழில் ஆர்வம் குறைகிறது; நாற்காலி உத்யோகத்தையே அனைவரும் நாடுகிறார்கள். எத்தனை பேருக்குத்தான் நாற்காலி உத்யோகம் தர முடியும்? திட்டத்தை மாற்றி அமைக்க இங்கே சிறந்த கல்வியாளர்களும் சிந்தனையாளர்களும் இல்லாமல் போகவில்லை. அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளாததுதான் குறை.

எழுத்தறிவு என்பது வேறு; கல்வி என்பது வேறு. ஆர். வி. யின் பேச்சு வெளியான அதே தினத்தில், மத்திய இணை அமைச்சர் செல்ஜா, ''2000 ஆண்டில் முழு எழுத்தறிவு பெற்ற நாடாக இந்தியா இருக்கும்'' என்று பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிறார். அதாவது சுதந்திரம் பெற்று 53 ஆண்டுகளுக்குப் பிறகு இவர்கள் மக்களுக்கு எழுத்துக் கூட்டிப் படிக்கவும் தங்கள் பெயரை எழுதவும் கற்றுத் தந்து விடுவார்கள்! அதுவும் செல்ஜாவின் கனவுதான்!

இதுவா கல்வி? கல்வி என்பது சுயமரியாதையையும் மனிதாபிமானத்தையும் உழைப்பார்வத்தையும் வளர்க்க வேண்டும். நமது நாடு குறித்துப் பெருமை கொள்ளச் செய்ய வேண்டும். சுயமாகச் சம்பாதிக்க வழிகாட்டுவதாய் இருக்க வேண்டும். இறை உணர்வை ஊட்டி, அடக்கத்தையும் நேர்மையையும் நல் ஒழுக்கத்தையும் கடைப்பிடிக்கச் செய்ய வேண்டும். சமத்துவம் என்பது பொருளாதாரத்தில் இல்லை. பொருளாதார சமத்துவத்தை உருவாக்கவும் முடியாது. சமத்துவம் என்பது ஒரு மனநிலை. அதனைச் சிறந்த கல்வி மட்டுமே வழங்க இயலும்.

சிறந்த கல்வி அளிப்பதில் வெற்றி பெற்றோமானால் நாட்டின் பல்வேறு பிரச்னைகளுக்கும் அதே சமயத்தில் தீர்வு கண்டவர்களாவோம். குடும்பக் கட்டுப்பாடு, சுகாதாரம், தேசிய ஒருமைப்பாடு, ஜாதிமதபேத உணர்வுகளை ஒழிப்பது, மதுவிலக்குப் பிரசாரம், சுற்றுப்புறச் சூழல் பராமரிப்பு போன்ற பல அம்சங்களுக்கு அரசு கோடி கோடியாகச் செலவழித்து வரும் பணம் மிச்சமாகும். இப்போது போல் வீண் விரயமாகாது!

இதற்கெல்லாம் சிறந்த கல்வித் திட்டம் மட்டுமல்ல; கடமை வீரர்களான ஆசிரியர் பட்டாளமும் வேண்டும். அவர்களுக்குச் சிறந்த பயிற்சி அளிக்கப்பட வேண்டும். ஒரு வகுப்பில் ஐம்பது சிறுவர்களை அடைக்கும் நிலை மாற வேண்டும். கூரையில்லாமல் பள்ளிகளையும் கரும்பலகை இல்லா வகுப்புக்களையும் வைத்துக் கொண்டு என்ன செய்ய?

ஐம்பதுகளில் ஒரு மகான் வழிகாட்டினார். குடும்பத் தொழிலைத் தொடர்வதில் பெருமை கொள்ளவும் இருக்கிற பள்ளிகளையும் ஆசிரியர்களையும் வைத்துக் கொண்டே இரட்டிப்பு மாணவ மாணவியருக்குக் கல்வி புகட்டவும் ஒரு திட்டம் கொணர்ந்தார். அதைக் 'குலக் கல்வி' என்று முத்திரை குத்தி ஒதுக்கினார்கள். இன்றைக்கும் மெக்காலே கல்வித் திட்டத்தைக் கட்டிக் கொண்டு அழுகிறார்கள்!

## உங்கள் கண்மணியின் கனவை கனவாகவே இருக்க விடாதீர்கள்

## குழந்தைகள் பரிசு வளரும் நிதி உதவி கொண்டு கனவை நனவாக்குங்கள்.



உங்கள் கண்மணிக்கு ஒரு பரிசை அளியுங்கள் அவனுடன் கூடவே வளரும் அப்பரிசு. யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதியில் முதலீடு செய்யுங்கள். உங்கள் கண்மணி 21 வயதாகும் போது நீங்கள் முதலீடு செய்யும் அப்பணம் அவனுக்கு தேவைக்கேற்ப உதவும்.

ஒரு மொத்த தொகையை ஒரே தடவையாக பரிசளிக்கலாம். அல்லது சிறு சிறு தொகையாக வருடா வருடம் செலுத்தலாம். எப்படியாயினும் உங்கள் கண்மணி 21 வயதாகும் போது அவன் லட்சாதிபதியாவதை உறுதி செய்யலாம் (அவனுக்கு தேவையானால் 18 வயதாகும் போது பணத்தை எடுக்கும் அனுகூலமும் உண்டு.)

யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதி. உங்களது சிறிது ஆலோசனை உங்கள் கண்மணியின் சிறந்த எதிர்காலத்தின் உத்தரவாதம்.

விண்ணப்ப பாரங்கள் யூனிட் ட்ரஸ்ட் கிளைகள், எல்லா பாங்குகள் மற்றும் கலெக்ஷன் சென்டர்களில் அங்கீகரிக்கப்படும்.

விண்ணப்ப பாரம் மற்றும் ப்ரோஷருக்கு ஏதேனும் யூனிட் ட்ரஸ்ட் கிளை முக்கிய பிரதிநிதி அல்லது ஏஜெண்டை அணுகவும்.

குழந்தைகள் பரிசு வளரும் நிதி

~~13%~~ **14% டிவிடெண்ட்**

**& 3 வருடத்திற்கொருமுறை போனஸ்**



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

22 மில்லியனிலும் அதிகம் யூனிட்தாரர்களின் சேவையில்.

எல்லா செக்யூரிட்டீஸ் இன்வெஸ்ட்மெண்டுகளும் மார்க்கெட் ரிஸ்க் கொண்டவை ஆகும். முதலீடு செய்வதற்கு முன் முதலீட்டு ஆலோசகர் அல்லது முகவரை கலந்தாலோசிக்கவும்.

**Branch Offices:** • Madras Ph: 517101, 517178 • Coimbatore Ph: 210399 • Madurai Ph: 34597 • Trichy Ph: 27774

Sista's UTI 1868 92 TM C



# 'மறுபடியும்' ரேவதி

●● திருமணத்துக்குப் பின் நடிக்க வந்து 'பிஸி'யாகிவிட்ட நடிகைகளின் வரிசையில் இப்போது ரேவதியும் இருக்கிறார். பாலுமகேந்திராவின் ''மறுபடியும்'' படப்பிடிப்பிலிருந்த ரேவதியைச் சந்தித்தோம்....

''ஒரு பெண்ணுக்கு மணவாழ்க்கை சரியில்லைன்னா உலகமே சூனியமாத் தெரியும். இத்தகைய சூழ்நிலையில்... பொருளாதாரரீதியாத் தன்னைத்தானே பாதுகாத்துக் கொள்கிற நிலையில் அவள் இருந்தால் மட்டுமே பிரச்னைகளைச் சந்திக்கத் தெளிவும் கிடைக்கும். இதைப் பற்றிய படம்தான் 'மறுபடியும்'. இந்தப் படத்தில் நடிப்பது எனக்கு ஒரு மாறுபட்ட அனுபவம். இந்த வாய்ப்பை எனக்குக் கொடுத்த பாலுசாருக்கு நான் தேங்க்ஸ் சொல்லணும்...!'' - என்று கூறி அருகிலிருந்த பாலுமகேந்திராவை நன்றியுடன் பார்த்தார் ரேவதி.

தொடர்ந்து... பாலுமகேந்திரா பேச ஆரம்பித்தார்... ''என்னுடைய படங்களில் உள்ள கதாபாத்திரங்கள் கற்பனைக் கதாபாத்திரங்களாக அமையாது. நிஜ வாழ்க்கையில்' எப்போதாவது சந்தித்த... சந்தித்துக் கொண்டிருக்கிற நபர்களின் அடிப்படையில்தான் என் கதாபாத்திரங்களை அமைக்கிறேன். 'மறுபடியும்' படத்தில் ரேவதியின்

● ராஜா ரவீந்தர் - ''பிரவுன் பெல்ட்''





● மோகன் - ''நம்பிக்கை இருக்கு...''

சினி சிப்ஸ்

கதாபாத்திரமும் அப்படிப்பட்டதுதான்.

''ரேவதியை நான் கேமிரா வழியே காணும் போது... ஓர் அபலைப் பெண் ணின் துக்கத்தை நேரடியாகக் காண்பதாக உணர்ந்து பல நேரங்களில் கண்கலங்கி யிருக்கிறேன்....'' - என்றபடி கேமிராவின் மீது தன் பார்வையைப் படரவிட்டார் பாலு மகேந்திரா.

மணிரத்னத்தின் அறிமுகமான அர்விந்த் இப்படத்தின் ஹீரோவாக நடிக்கிறார். இனி மேல் மூன்று வருடத்திற்கு இவர் நடிக்கப் போவதில்லை. காரணம்... மேற்படிப்பிற் காக வெளிநாடு சென்றுள்ளார். படிப்பு முடிந்த பின்னர்தான் நடிப்பு!

●● ஒரு காலத்தில் தொடர்ந்து சில்வர் ஜுப்ளி படங்களில் நடித்தவர் மோகன். இன்று அதிகம் வாய்ப்பின்றி இருக்கிறார். இருந்தாலும் அதற்காக அவர் சிறிதும் வருத்தப்படுவதாகத் தெரிய வில்லை... ''சினிமாவுல இதெல்லாம் சகஜம் சார்.. பெரிய பெரிய ஆளுங்கல்லாம் இன்னிக்கி ஒண்ணுமே இல்லாம சும்மா இருக்கும் போது, நான் ஒண்ணு, ரெண்டு படங்களாவது நடிச்சிட்டிருக்கேனே, அதுவே சந்தோஷம்.. இருந்தாலும் கண்டிப்பா நான் திரும்பவும் ஒரு ரவுண்டு வருவேங்கற நம்பிக்கை எனக்கிருக்கு...!'' - மனம் தளராத தன்னம்பிக்கையுடன் சொல் கிறார்.

●● ''பொண்டாட்டி ராஜ்யம்'' படத்தில் இரண்டாவது ஹீரோவாக நடித் திருக்கும் ராஜா ரவீந்தர்... தெலுங்குப் படவுலகில் ஹீரோ.

''தெலுங்கில் ஹீரோவாக நடித்துவரும் நான், தமிழில் சிறிய ரோலிலும் நடிக் கிறேன்... அதற்குக் காரணம்.. எனக்குள்ள தமிழ்ப்பற்றுதான்... மேலும் தமிழில் நிலைக்க வேண்டும் என்பதே என் விருப்பம்....'' - எனக் கூறும் ராஜா ரவீந்தர் குங்ஃபூவில் பிரௌவுன் பெல்ட் வாங்கி யவர்.

உலக அணி சேரா நாடுகள் ஒன்று கூடி நடத்திய ''நான் அலைன்மென்ட் யூத் ஃபெஸ்டிவெல்'' நிகழ்ச்சியில் 120 நாடுகள் கலந்து கொண்டன. இவ்விழாவில் இந்தியா சார்பாக கலந்து கொண்ட ராஜா ரவீந்தர் சிறந்த நடனமாடியதற்காகப் பரிசைப் பெற்றுவந்தார்.

– கலைத்தூதன்




# வேலை தேடும் வேளையில்...

'பீக் அவர்' நேரத்தில், போக்குவரத்துக்கு எந்தவிதமான இடைஞ்சலும் இன்றி, முதல்வர் சென்றால் அது எவ்வளவு அதிசயமோ, அவ்வளவு ஆச்சரியமாக இருந்தது - கூட்டமேயில்லாமல் பிளாட்பாரத்தில் வந்து நின்ற அந்த மின்சார வண்டியைப் பார்த்ததும்...

''அப்பாடா'' என்று ஜன்னலோரம் காலியாக இருந்த சீட்டில் உட்கார்ந்து கொண்டார் கந்தரேசன். அப்பொழுதுதான் ''நில்லுங்கள்'' என்று கொட்டை எழுத்தில் காணப்பட்ட அந்த விளம்பரத்தைப் பார்த்தார். தூக்குக் கயிறு படத்துடன் காணப்பட்ட அந்த வித்தியாசமான விளம்பரத்தைக் கவனமாகப் படிக்க ஆரம்பித்தார்...

'உங்களது தனிமையும் மனச்சோர்வும் தற்கொலை உணர்வாக மாறுமாயின் சிநேகாவுடன் தொடர்பு கொள்ளவும். தொலைபேசி மூலமோ, நேரிலோ, கடிதம் மூலமோ தொடர்பு கொள்ளலாம்.'

அந்த விளம்பரத்தைப் படித்த கந்தரேசனுக்குத் 'திக்'கென்றது...

''இதன்படி பார்த்தால்... தனது பி.காம். படித்த மகன்... வேலையில்லாத, தன்னால் தண்டச்சோறு - ஊர்சுற்றி என்று அடிக்கடி ஏசப்படும் மகன் - கடந்த இரண்டு நாட்களாகத் தான் வீட்டிலிருக்கும் சமயம் வெளியே சென்று விடும் மகன் - மனக்கமையுடன், தனிமையில் தற்கொலையைப் பற்றி நினைத்திருப்பானோ...? ஐய்யோ... இதற்காகவா நாம் அவனைக் கஷ்டப்பட்டு பட்டதாரி ஆக்கினோம்...? கூடாது... அவன் தற்கொலையைப் பற்றி நினைக்கவே கூடாது...''

சில நிமிடங்களுக்குத் தீவிரமாக யோசித்த கந்தரேசன், மறுநாள் சிநேகா நிறுவனத்திற்குச் சென்றார்...

தன்னைப் பற்றி - தம் மகனைப் பற்றி - வேலையில்லாத அவனிடம் தாம் நடந்து கொண்டது பற்றி - அனைத்தையும் சொன்னார். தமது மகன் தற்கொலை அது இது என்று விபரீதமாக எதையாவது செய்யாமல் இருக்க, தமக்கு உதவுமாறு அவர்களிடம் கோரினார்.

கந்தரேசன் சொன்னதைப் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்த சிநேகா நிறுவனத்தினர், மேஜை டிராயரைத் திறந்து ஒரு கடிதத்தை அவரிடம் கொடுத்தனர்.

ஒரு கணம் ஒன்றும் புரியாமல் அவர்களைப் பார்த்த கந்தரேசன், தயக்கத்துடன் அந்தக் கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தார்...

அன்புள்ள சிநேகா நிறுவனத்தினருக்கு,

வணக்கம். மின்சார வண்டியில் உங்களது விளம்பரத்தைக் கண்டேன். நேரில் வர பஸ் கட்டணம் ஆகும் என்பதால் இந்தக் கடிதம்.

நான் ஒரு வேலையில்லா பட்டதாரி. ஆனால் பிரச்னை என்னைப் பற்றியது அல்ல, என் தந்தையைப் பற்றியது. படித்தவர்கள் வேலை தேடி அலைவது இன்று சாதாரணமாகி விட்ட ஒன்று. எனவே வேலை கிடைக்கும் வரை எனது வேட்டை ஓயாது. ஆனால் என்னை மிகுந்த கஷ்டங்களுக்கிடையே படிக்க வைத்து ஆளாக்கிய என் அப்பாவிற்கு, எனது வேலையின்மை பெருத்த ஏமாற்றத்தைக் கொடுக்கிறது. எனது திறமையில் நம்பிக்கை கொண்ட நான், வேலை நிச்சயம் கிடைக்கும் என்பதில் உறுதியாக இருக்கிறேன். ஆனால் இன்னும் ஆறே மாதத்தில் ஓய்வு பெறப் போகும் என் தந்தையோ உடைந்து போய் விட்டார். கல்யாணத்திற்கு எனக்கொரு தங்கை இருக்கிறாள். எனவே அவரது மனச்சோர்வு இன்னும் அதிகமாகிறது. எனது வேலையின்மையால் ஏற்பட்ட வெறுப்பில் - விரக்தியில் - நான் வீட்டிலிருக்கும் சமயம், அவர் வீட்டிற்கு வருவதையே தவிர்க்கிறார்... உங்கள் விளம்பர வாசகங்களின்படி அவரது இந்தத் தனிமையும், மனச்சோர்வும்... ப்ளீஸ் அப்படியொரு அசம்பாவிதம் ஏதும் நடந்து விடக் கூடாது... அவருக்கு நம்பிக்கை ஊட்டும் நிலையில் நான் இல்லை... எனவே அவருக்கு உங்கள் உதவி தேவை...என் மீது நம்பிக்கை கொள்ளும் அளவிற்கு அவரை மாற்றினால் கூட போதும்... அதுவே எனக்கு வேலை கிடைத்தது போல் தான்... நன்றி...

தமது மகனின் கடிதத்தை மூச்சு விடாமல் படித்த கந்தரேசன் பிரமித்துப் போய் விட்டார்...

**க. ஒப்பிலி அப்பன்**



அன்பு



பரிவு







● "இது தானே பெரியபட்டி....?"

# பெரிய

காட்சி - 13

*(பெரியபட்டி கிராம எல்லை)*

**எல்லைச்சாமி :** யாரு வாராக? ரொம்ப நேரமா மாலையைக் கைல புடிச்சிக்கிட்டு நிக்கிக?...

**சி. பண்ணை :** நம்ம ஊரு பள்ளிக்கூடத்துக்குப் புதுசா வாத்யாரு வாராராம்! இப்படி அனாமத்தா ஒரு பள்ளிக்கூடம் இருக்கறதக் கேள்விப்பட்டு அவராவே சேவை செய்ய வாரேன்னு பஞ்சாயத்துக்குத் தந்தி அடிச்சிருக்காரு!

**எல்லைச்சாமி :** ஊர்ல ஒரு பயலை மாடு மேக்க விடாதீக! படிப்பு அது இதுன்னு கெடுத்துப்புடுங்க!...

**தெருப்புழுதி :** வாத்யாரு வாராரு!... அதோ பாருங்க!...

இந்த நாடகத்தைப் பகுதி அளவிலோ முழுமையாகவோ அரங்கேற்ற விரும்புபவர்கள் எஸ்.வி. சேகரின் முன் அனுமதி பெற வேண்டும்.

## எஸ்.வி.சேகர்

வசனம்: வெங்கட்

*(பெரியதம்பி வாத்தியார் போல் மாறுவேடம் அணிந்து வருகிறான். தெருப்புழுதி அவன் பெட்டியை வாங்கிக் கொள்கிறான்.)*

**வாத்தியார் :** வணக்கம்! இதுதானே பெரியபட்டி.. சீட்டுல உள்ள அட்ரஸ்லயும் பலகைல உள்ள பேரும் வேறயா இருக்கு....

**சி. பண்ணை :** சரியாத்தான் வந்திருக்கீக. நீங்க வந்துதான் எங்கெங்க கால் வாங்கணும், வாங்கக் கூடாதுனு தெரிஞ்சுக்கணும் நாங்க... வாத்தியாரு பேரு?

**வாத்தியார் :** வைச்சதா? கூப்பிடறதா?

**சி. பண்ணை :** ரெண்டையுமே சொல்லுங்க.

**வாத்தியார் :** இரண்டுமே பூவராகதான். சொந்த ஊர் கடுக்காய்ப்பட்டி.

*(வாத்தியாருக்கு மாலை அணிவிக்கிறார்கள்.)*

**சி. பண்ணை :** மாடசாமி, காதக்குடு!

**வாத்தியார் :** வத்திப்பெட்டி கேக்கற மாதிரி காதக் குடுன்னு கேக்கிறீங்களே!

**சி. பண்ணை :** இவனைப்பாத்தா பெரிய தம்பி மாதிரி இல்ல?..

**மாடசாமி :** பெரியதம்பி மாதிரியா...?

**வாத்தியார் :** ஐயா நீங்க லொள்லொள் லட்சுமணன்தானே....

**சி. பண்ணை :** சீச்சீ....

**வாத்தியார் :** பொய்தானே வேண்டாம்கறது....? உங்க நாய் சௌக்கியமா? சம்சாரம் எப்படி இருக்காங்க? பைத்யம் தெளிஞ்சிடுச்சா?

**சி. பண்ணை :** நான் லொள்லொள்

லட்சுமணன் இல்ல!... நா இந்த ஊர்...

**வாத்தியார் :** ஓ....! லட்சுமணனைப் பாத்தா உங்களைப் பாக்க வேண்டாம்... உங்களைப் பாத்தா அவரப் பாக்க வேண்டாம்... அச்சா இருக்கீங்க!...

**சி. பண்ணை :** அப்படியா! நான் கூட நீங்க பெரிய தம்பியோன்னு நினைச்சுட்டேன்...

**வாத்தியார் :** இப்ப நினைக்கல இல்ல? அது போதும். அதுயாரு பெரியதம்பி?

**மாடசாமி :** சொல்றேங்க. இவன்தான் தெருப்புழுதி!...

**வாத்தியார் :** கார்ப்பரேஷன் லாரி ஓட்றாரா?

**மாடசாமி :** மாடு ஓட்றாரு! அரி

# தம்பி

யாப்பயா! வி ஷ ய ங் க சட்டுன்னு இவன் மூளைக்கு எட்டாது.

**வாத்தியார் :** இவர் மூளை என்ன இவர்ட்ட இருந்து அவ்வளவு தள்ளியா இருக்கு?

**சி. பண்ணை :** பெரியதம்பிக்குத் திருகாணியைக் குடுக்கலாம்னு திட்டமுங்க.... ஆனா பெரியதம்பி இவனைவிட்டு என் மக திருகாணி கழுத்துல தாயத்துன்னு சொல்லி, தாலியைக் கட்ட வச்சிப்புட்டாங்க!

**வாத்தியார் :** அடப்பாவமே! இப்படி உலகம்னா என்னன்னே தெரியாத ஆளை வச்சிக்கிட்டு ஒரு பொண்ணு எப்படி சந்தோசமா குடும்பம் நடத்தறது?

**தெருப்புழுதி :** நல்லா கேட்டீங்க! திருகாணி இப்ப முழுகாம இருக்குது. பொறக்கப்போற கொழந்தைக்குப் பேரு கூட யோசிச்சுட்டோம்...

**வாத்தியார் :** ஆமாம் இந்த ஊருக்கு யார் பெரிய மனுஷன்?

**சி. பண்ணை :** பெரிய பண்ணைதான். வாங்க நான் அறிமுகப்படுத்திவிடறேன்.

**வாத்தியார் :** யாரவன் பெரிய பண்ணை?

**சி. பண்ணை :** பெரியதம்பியோட அப்பன்!

**வாத்தியார் :** பெரியதம்பி விஷயத்துல அந்தாள் எப்படி இருக்காரு?

**சி. பண்ணை :** பெரிய தம்பி திரும்பி வந்தா... அவனைப் படியேத்த மாட்டேன்னு பிடிவாதமா இருக்காரு.

**வாத்தியார் :** அப்படியா? ஆமா நீங்க..... என்ன பண்றீங்க?

**மாடசாமி :** ஐயாதன் சின்ன பண்ணை.

**வாத்தியார் :** அட! பண்ணை வியாபாரமா? பால் நல்லா விக்குதா?

**மாடசாமி :** பண்ணைன்னா நிலபுலம்...

**சி. பண்ணை :** சரி வாங்க, பெரிய பண்ணை வீட்டுக்குப் போவம்...

## காட்சி - 14

*(பண்ணை வீடு)*

**சி. பண்ணை :** பெரிக! இது நம்ம ஊருக்கு வந்திருக்கற வாத்யாரு!

**கருப்பாயி :** அடி ஆத்தி!

**வாத்தியார் :** ஆத்தி இல்லீங்க. நான்



■ "எல்லை.... தொல்லை பண்ணாதே...."



“ராஸ்கல், இன்னொரு தடவை இந்த மாதிரி விஷமம் பண்ணிலே - அப்புறம் நான் பேச மாட்டேன். என் பிரம்புதுதான் பேசும்...!”

“அப்பாவன்னா.. உங்களுக்கு 'மேஜிக்'கும் தெரியுமா சார்...?”

ப. சுவாசாமி.



“எனக்கு என்ன வி யா தி டாக்டர்...?”

“அதான் சீட்டுக் குலுக்கிப் போட்டிருக்கேனுல்ல... சட்டுன்னு ஒன்னு பொறுக்கி எடுத்துக்குடுங்க, பார்ப்போம்!”

- வி. ரெங்கநாதன்.

“மனுஷன்னா பங்சுவாலிடி வேணும்யா.... அது தெரியாததால் தான் தமிழன் இன்னும் முன்னேறாமலேயிருக்கான்!”

“ரொம்பத்தான் திட்டாதீங்க ஸார்.. லஞ்சப் பணத்தைக் கால்மணி நேரம் தாமதமாக் கொண்டு வந்து நீட்டிய தற்கு!”

- உ. ராஜாஜி.



வாத்தி!...

கருப்பாயி : அதே உருவம், அதே பேச்சு, பெரிதம்பி!

வாத்தியார் : யாருங்க இது...? இவ்வளோ உணர்ச்சி வசப்படறாங்க?...

சி. பண்ணை : இதான் பெரிதம்பியோட ஆத்தா! கருப்பாயி! இது பெரிதம்பி இல்ல!

பண்ணை : இது ஊருக்குப் புதுசா வந்திருக்கற வாத்தி!... எனக்குத் தெரியாதா பெரியதம்பிய?...

கருப்பாயி : அப்படியா சேதி! அச்சா இருக்கீகளே!...

(திருகாணி வருகிறாள்)

திருகாணி : ஏ மாமூ...! அட ஆத்தி... மாமூ எப்போ வந்திச்சி!?

பண்ணை : மாமூவும் இல்ல கோமுவு மில்ல; வாத்யாரு! வாத்யாரு! வாத்யாரு!

வாத்தியார் : ஆகா! எவ்வளோ புத்தி கூர்மை! ஒங்களுக்குப் போய் அப்படி ஒரு மகளா?

சி. பண்ணை : இவளைத்தான் பெரிய தம்பி ஏமாத்திட்டு ஓடிட்டான்.... இவ வாழ்க்கையே ஒரு கேள்விக் குறியாயிடிச்சு!

வாத்தியார் : அத நீங்க சொல்லத் தேவையில்லை... ஜடையப் பாத்தாலே தெரியுது!... கேள்விக்குறி மாதிரிதான் இருக்கு.

திருகாணி : மாமனுக்குன்னே வளந்தேன்!...

வாத்தியார் : விடு! எல்லாம் விதி! ஒருத்தன் பொண்டாட்டிய இன்னொருத்தர் கட்ட முடியாது... இப்ப பாருங்க பெரிய பண்ணை அவர் சம்சாரத்தைத்தான் கட்ட முடிஞ்சது... மாடசாமி அவர் சம்சாரத்தைத் தான் கட்ட முடிஞ்சது...

தெருப்புழுதி : இல்லியே.. செத்தாரே சொக்கலிங்கம், அவர் சம்சாரத்த இல்ல கட்னாரு!... பிரச்னை பஞ்சாயத்து வரைக் கும் வந்துச்சே!

மாடசாமி : அதாடா இப்ப முக்கியம்!?

வாத்தியார் : அதான் பட்டா மாத்தி எழுதியாச்சு இல்ல...

கருப்பாயி : உங்களைப் பார்க்கையில என் மகன் பெரியதம்பியைப் பார்க்கிற மாதிரியே இருக்கு. அதனால அவன் கிடைக் கிற வரைக்குமாவது நீங்க இந்த வீட்லியே தங்கிக்கலாம்.

வாத்தியார் : வேணாங்க நான் ஸ்கூல் லயே தங்கிக்கிறேன். படிக்க வர பசங்க எண்ணிக்கை மொத்தம் எத்தனை....?

மாடசாமி : பசங்க இனிமேதான் சேர ணும்!.... எங்களையும் அப்படியே சேத்துக் குங்க...

வாத்தியார் : முதியோர் கல்வியா?..

சரி... காலைல பத்து மணிக்கு ஸ்கூல். கரெக்டா வந்திடுங்க... மத்த கிழவன் கிழவி களையும் இட்டாங்க. நான் கிளம்பறேன்.

**சி. பண்ணை :** கொஞ்ச நேரம் பொறுங்க. நான் போயி பள்ளிக்கூடத்துல தூசி அடிச்சி, சுத்தம் பண்ணச் சொல்றேன்.

**பண்ணை :** மொதல்ல வாத்தியார் தங்கப்போற ரூமுக்குள்ள இருக்கற பாம்புப் புத்தை எல்லாம் இடிங்க. எந்தப் புத்துல எந்தப் பாம்பு இருக்கோ!

**வாத்தியார் :** அதனால என்ன, நான் ஒவ்வொரு புத்தா போய் அறிமுகப் படுத் திக்கறேன்.

**கருப்பாயி :** தம்பி களைச்சு வந்திருங் கீங்க மொதல்ல முட்டையும் பாலும் கொண்டு வரேன் சாப்பிட்டுட்டு....

**வாத்தியார் :** புத்துல போய்ப் படுத்துக் கறேன்.

## காட்சி - 15

*(ஒரு மரத்தடி)*

*(பெரிய பண்ணை, சின்ன பண்ணை, கருப்பாயி, எல்லைச்சாமி, மாடசாமி, செருப்புமுடி, இருகாணி முதலியோர் அமர்ந்திருக்க, வாத்தியார் பாடம் நடத்து கிறார்!)*

**வாத்தியார் :** 'நான் அழகா இருக்கேன்.' இது எந்த காலம்?

**எல்லைச்சாமி :** அது அந்தக் காலம் தம்பி!

**வாத்தியார் :** எல்லை... தொல்லை பண்ணாத! நல்ல முதியோர் கல்வி...! லட்சுமி பாட்டி எங்க?

**கருப்பாயி :** அவுங்க கட் அடிச்சிட்டு மாட்னி சோவுக்கு போய்ட்டாங்க.

**வாத்தியார் :** நல்ல பள்ளிக்கூடம்! சரி... இப்ப இதென்ன?

**பண்ணை :** ஆரஞ்சு!

**வாத்தியார் :** இதுல இருந்து வர்ற ஜூஸுக்கு என்ன பேரு?

**பண்ணை :** ஆரஞ்சு ஜூஸ்!

**வாத்தியார் :** பெரிய பண்ணை படிப்புல கட்டி!... இது என்ன?

**சி. பண்ணை :** எலுமிச்ச!

**வாத்தியார் :** இதப் புரிஞ்சா அது என்ன ஜூஸ்?

**சி. பண்ணை :** எலுமிச்ச ஜூஸ்!

**வாத்தியார் :** சின்ன பண்ணை, புத்தி சாலியா நீரு!... இப்ப இது என்ன? பால். இதுக்கு இங்கிலீஷ்ல என்ன சொல்றது?

**செருப்புமுடி :** மாட்டு ஜூஸ்!

**வாத்தியார் :** இந்த ஊர் உருப்படவே உருப்படாது!

**பண்ணை ஆள் (ஓடி வந்து) :** வாத்தியார் அய்யா!

**வாத்தியார் :** மெதுவா! மெதுவா! ஏன் ஓடி வர்ற?

**ஆள் :** ஊர்ல இருந்து சம்சாரம் வந்திருக்காங்க!

**வாத்தியார் :** வந்தா என்ன? ஜாலியா இரு....

**ஆள் :** நீங்க கோவிக்கக்க மாட்டீகளா?

**வாத்தியார் :** ஏன்? நான் ஏன் கோவிச் சுக்கணும்?

**ஆள் :** வந்திருக்கிறது உங்க சம்சாரம்!...

**வாத்தியார் :** என் சம்சாரமா?

**ஆள் :** அப்படித்தான் சொல்றாங்க!

**வாத்தியார் :** எவளோ சொன்னா அதை உடனே நம்பிடறதா?

**ஆள் :** அடையாளம்... சரியாச் சொல் றாங்களே! அவங்களே வர்றாங்க... பேசிக் குங்க!

(தொடரும்)

படங்கள் : **யோகா**

## பி.பி.ஸியில் பகவத்கீதை!



விரைவில் 'பைபிள்' கதைகள், தூர்தர்ஷனில் தொடர் நிகழ்ச்சியாக ஒளிபரப்பப்பட இருக்கின்றன. இங்கிலாந் திலோ BBC பகவத்கீதையைத் தொலைக்காட்சியில் ஒளி பரப்ப இருக்கிறது. பகவத் கீதையின் இருபது பாகங்களும் ஒன்றுவிடாமல் இதற்காக உருவாக்கப்பட இருக்கின்றன. கிருஷ்ணன் இல்லாமல் கீதையா? அதற்கு ஏற்ற ஒருவரைப் பலவாறு தேடி கடைசியில் மகாபாரதத்தில் கண்ணனாக நடித்துப் பலரது உள்ளங்களைக் கவர்ந்த நித்தீஷ் பரத் வாஜையே ஒப்பந்தம் செய்து இருக்கிறார்கள்!

இங்கே 'பைபிள்'! அங்கே 'பகவத்கீதை'!

- எக்ஸ்பிரஸிலிருந்து. - சேலம் சக்திக்கொடி.

# பயங்கரவாதிகளுக்கு மத்தியிலும் பாதுகாப்பாகவே உணர்கிறேன்

- பத்திரிகையாளர் தவ்லீன் சிங் பேட்டி



டெல்லியில் வசதி மிக்கவர் வாழும் பகுதி. கௌரி அபார்ட்மெண்ட்ஸ் முதல் மாடியில் அழைப்பு மணியை அழுத்திய போது, கதவு அரை குறையாகத்தான் திறந்தது. காரணம் : உள்ளே வளையவரும் இரண்டு மூன்று 'டாஷண்டு' நாய்கள்....

ஜீன்சும் ஷர்டுமாக, திண்டு மெத்தையில் சாய்ந்தபடி, தமது பழைய கட்டுரை ஒன்றைத் தேடிக் கொண்டிருந்த தவ்லீன் சிங், எழுந்து வரவேற்றார்.

வரிசையாக அடுக்கி வைக்கப்பட்ட ஏராளமான புத்தகங்கள், டீவி, வி.சி.ஆர்., காசெட்டுகள்... மெலிதாக ரீங்காரமிட்ட ஏர்கண்டிஷனர் ஓசை. மேசை மேல் கம்ப்யூடருடன் இணைந்த FAX இயந்திரம். ராஜீவுடன் பேசும்போது எடுத்துக் கொண்ட வண்ணப்படம்...

● **படு துணிச்சலாக எழுதுகிறீர்கள். இக்கட்டான இடங்களுக்கும் துணிந்து சென்று, பயங்கரவாதிகளுடனும், வாக்குச் சாவடிகளில் புகுந்து ரகளை பண்ணுபவர்களுடனும், பேசி வருகிறீர்கள். நீங்கள் எதற்கும் அஞ்சுவதே இல்லையோ?**

''பஞ்சாப் பயங்கரவாதிகளாகட்டும், காஷ்மீர் பயங்கரவாதிகளாகட்டும். அவர்களிடம் நாங்கள் ஒரு போதும் பாதுகாப்பற்ற நிலையை உணர்ந்ததில்லை. என்னை விடத் துணிச்சல் மிகுந்தவள் நளினி சிங் தான். உங்கள் பாராட்டு முதலில் அவளுக்குத்தான் சேர வேண்டும். நிருபரின் அபிப்ராயத்தை வெளியிடுவதைத்தான் தீவிரவாதிகள் எதிர்க்கிறார்களே தவிர, உள்ளதை உள்ளபடி எழுதினால் யாருமே வரவேற்பார்கள். நாங்கள் என்ன பார்க்கிறோமோ அதை அப்படியே ரிப்போர்ட் செய்கிறோம். அதனால்தான் எங்கள் எழுத்தை விரும்பிப் படிக்கிறார்கள்.''

● **எத்தனை பத்திரிகைகளுக்கு எழுதுகிறீர்கள்?**

''வாரத்தில் இரண்டு கட்டுரைகள் எழுதுகிறேன். அவை பத்து ஆங்கிலப் பத்திரிகைகளில் பிரசுரம் ஆகின்றன. இவற்றின் இந்தி, மராத்தி வடிவங்கள் அந்தந்த மொழிகளில் வெளியாகின்றன. தவிர, லண்டன் 'சண்டே டைம்ஸின் தனி நிருபராகவும் இருந்து வருகிறேன். இடையிடையே 'வேர்ல்ட் திஸ் வீக்', 'பிஸினஸ் பிளஸ்', 'பீப்பிள் பிளஸ்' என்று டீவி, மற்றும், வீடியோ இதழ்களுக்குக் காமிரா டீமுடன் நேரில் போய்ப் பேட்டிகள் செய்கிறேன்... கடுமையாக உழைக்கத்தான் எனக்குப் பிடிக்கும். தவிர, என்னைப் பொறுத்தவரை இது சுவாரசியமான வேலை.''

● **எப்போது எழுத ஆரம்பித்தீர்கள்?**

''இங்கிலாந்தில் ரிப்போர்ட்டராகப் பயிற்சி பெற்று, இரண்டரை வருடங்கள் அங்கேயே பணி புரிந்தேன். இந்தியாவுக்கு '74 ல் வந்தேன். கொஞ்ச நாள் சும்மாவே இருந்தேன். '75 ல், 'ஸ்டேட்ஸ்மனு'க்கு எழுத ஆரம்பித்த சமயத்தில்தான் எமர்ஜென்சி கொண்டு வரப்பட்டது.''

● **எமர்ஜென்ஸியின் போது தில்லி துர்க்மான் கேட் சம்பவத்தைப் பற்றி எழுதியதற்காக 'எக்ஸ்பிரஸ்' நிருபருக்கு இப்போது ஜக்மோகன் தண்டனை வாங்கிக் கொடுத்திருக்கிறாரே?**

''இதைக் கடுமையாக விமர்சித்து நான் எழுதியதைப் படித்திருப்பீர்களே? நானும் அந்த இடத்துக்குப் போயிருந்தேன். என் அநுபவத்தை வைத்து ஒரு கட்டுரையும் எழுதினேன். அன்றைக்கு என்ன நடந்தது என்று பாதிக்கப்பட்டவர்களை நேரடியாக விசாரித்துத்தான் எழுத முடியும். இதைத் தவறு என்று எப்படிச் சொல்ல முடியும்? ஆசிரியர்கள் சம்மேளனமும், பத்திரிகை அதிபர்களும் இது போன்ற தீர்ப்புக்களை எதிர்த்து நிற்க வேண்டாமா? செய்யவில்லையே என்ற வருத்தம் எனக்கு உண்டு.''

● **ராஜீவுடன் உங்கள் பழக்கம் எப்படி?**

''போன தேர்தல் வரை அவருடன் கிட்டத்தட்ட எல்லா பொதுக்கூட்டங்களுக்கும் போனேன். ஒரு நண்பர் என்ற அளவில் அவரை மிகவும் நேசித்தேன். ஆனால் ஒரு பிரதமர் என்ற முறையில் அவர் எல்லாரையும் ஏமாற்றிவிட்டார் என்றே சொல்லுவேன். பிரச்னைகள் பலவற்றின் ஆழத்தை அவர் புரிந்து கொள்ளவே இல்லை; சரியாகப் புரிந்து கொள்ளவும் அவரைச் சுற்றியிருந்த கோஷ்டி விடவில்லை.

''அந்தக் கோஷ்டியை வைத்துக் கொண்டு அவர் படாதபாடு பட்டார்.

**பதினைந்து வருடங்களுக்கு மேலாக, பல்வேறு அரசியல் தலைவர்களின் குணாதிசயங்களையும் செயல்பாட்டையும் கூர்ந்து கவனித்து, அரசியல் கட்டுரைகள் எழுதுபவர் தவ்லீன் சிங். அசாத்திய தைரியசாலி என்றும், துணிச்சல் மிகுந்தவர் என்றும் தில்லி பத்திரிகையாளர் வட்டாரத்தில் பேசப்படுபவர்.**

✱ இந்த உலகம் நீங்கள் எப்போது கீழே விழுவீர்கள் என்று எதிர்நோக்கிக் காத்திருக்கிறது - உங்கள் மீது ஏறி ஓட. - அமெரிக்கப் பழமொழி. ✱ ஆயிரம் எதிரிகளைவிட, ஒரு போலி நண்பனால்தான் தீமை அதிகம். - அர்மீனியப் பழமொழி. ✱ நாலு கால்களுடைய குதிரையும் வழுக்கி விழும். - ஆஸ்திரேலியப் பழமொழி. தொகுப்பு : ராஜ்குமார்.

பிரதமர் என்ற வகையில் அவருக்கு அரசியல் ஆலோசனையும் உதவியும் தேவையாக இருந்தன. ஆனால் அவற்றை அவர் வேண்டிப் பெறவே இல்லை.''

● **பஞ்சாப்-காஷ்மீர் பற்றி அதிகம் எழுதியவர் நீங்கள்....**

''பஞ்சாப் மற்றும் காஷ்மீரின் பிரச்னைகள் பற்றிய உண்மைச் செய்திகள் அதிகம் வெளியே தெரியாத நிலை. இந்த இரண்டு மாநிலங்களிலும் உள்ள உண்மை நிலவரங்கள் மூடி மறைக்கப்பட்டன. அரசின் தவறான கொள்கைகளும், பிடிவாதமும்தான் இவற்றுக்குக் காரணம். பிந்தரன்வாலேயை ஒரு மத அடிப்படைவாதியாக உணராமல், அவரை ஒரு 'க்ரூக்' - தந்திரக்காரர் என்றே சித்திரித்தார்கள். இந்திரா காந்தியிடம், அவரை ஒரு 'க்ரூக்' என்கிற மாதிரியே படம் பிடித்துக் காண்பித்தார்கள், அவரைச் சுற்றியிருந்தவர்கள். தவறு அங்கே ஆரம்பமாகியது.

''காஷ்மீர்.... '83 - ஆம் வருடத்துத் தேர்தலின்போது, எழுதுவதற்காக நான் அங்கே போனேன். ஷேக் அப்துல்லா மறைந்த பிறகு நடந்த தேர்தல் அது. முக்கியமான தேர்தல். அப்போதும் இந்திராவுக்குத் தவறான தகவல்களையே தந்தார்கள்; தவறான வழிகளையேதான் காண்பித்தார்கள். அப்போது எல்லா பத்திரிகைகளும் எழுதிய படி, காங்கிரஸ் ஒன்றும் அங்கே ஸ்ட்ராங்காக இருக்கவில்லை. ஃபாரூக் அப்துல்லாதான் ஜெயிப்பார் என்று எழுதின ஒரே பத்திரிகையாளர் நான்தான். இந்திரா காந்திக்குத் தாங்கவில்லை. ஃபாரூக்கின் அமைச்சரவையைக் கவிழ்த்துவிட்டார். பஞ்சாபிலும், காஷ்மீரிலும் எனக்கு நேரிடையாகத் தெரிந்த உண்மைகளை நான் மக்களுக்கு எடுத்துச் சொல்ல முயன்றேன். ஆனால், நண்பராய் இருந்தும், ராஜீவிடம் வலியச் சென்று நான் ஆலோசனைகள் தரவில்லை.''

● **போஃபோர்ஸ் விவகாரத்தில் சித்ரா சுப்பிரமணியத்தின் பணி எப்படி?**

''சித்ரா செய்தது பிரிலியன்ட் ஜாப். வேறு எந்த பத்திரிகையாளரும் அந்த அளவுக்குச் செய்திருக்க முடியாது. எத்தனையோ ரிஸ்க் எடுத்துத் தகவல் சேகரித்து, மொழி பெயர்த்து, விவரமாக எழுதினார். எல்லாவற்றுக்கும் மேல், அவள் ஒரு தைரியசாலி.''

● **பிரதமர் நரசிம்மராவுடன் பழகி வருகிறீர்கள். அவரை எப்படி எடை போடுகிறீர்கள்?**

''நான் பத்திரிகையாளராக அடியெடுத்து வைத்த நாளிலிருந்து பார்த்தால், நரசிம்மராவை மிகச் சிறந்த பிரதமர் என்பேன். அதற்காக அவரைப் பிரமாதமான பிரதமர் என்று சொல்லவரவில்லை.

''கவர்ச்சியான தோற்றம், நடை, உடை, பேச்சு உள்ளவராக இருந்தால் அவரை நம் மக்கள் கிட்டத்தட்டக் கடவுளாகவே மதிக் கிறார்கள். அப்படிப்பட்ட தலைவர்கள் இருப்பதே ஆபத்தானது. அவர்கள் செய்யும் தவறுகள் ஆபத்தானவையாக முடியும் என் பது மட்டுமல்ல, ஒரு வேலையும் ஒழுங்காக நடைபெறுவதில்லை! நரசிம்மராவுக்குக் கவர்ந்திழுக்கும் தன்மை இல்லாது போகலாம். ஆனால் சரித்திரத்தின் நெருக் கடியான இந்தக் காலகட்டத்தில் நாட்டைத் திறம்பட அவரால் நடத்திச் செல்ல முடிகிறதே? வெளியுறவுக் கொள்கையிலும், மத்திய அளவில் திட்டமிடலிலும் மறு பரிசீலனை என்று புதிய அத்தியாயத்தை எழுதத் தொடங்கியிருக்கிறார் அவர். அரசுச் செலவினங்களைக் குறைக்க வேண்டும் என்று குறியாக இருக்கிறார். அதிகாரங்களைப் பரவலாக்காவிட்டால் நாடு சிதறுண்டு போகும் என்பதை உணர்ந்திருக்கிறார். பஞ்சாப்-காஷ்மீர் விவகாரங்களில் இது வரை இல்லாத ஓர் அணுகுமுறை அவரிடம் தெரிகிறது. அயோத்தி பிரச்னையிலும் அவர் புத்திசாலித்தனமாகச் செயல்பட்டிருக்கிறார்.. நமது மக்கள் இயல்பாகவே திறமைசாலிகள்தாம். ஊழலை ஒழித் துக் கட்டினால் நம்மாலும் நிச்சயம் முன் னேற முடியும். அவர் கொண்டு வந்த பொருளாதாரச் சீர்திருத்தங்களுக்காகவே நான் ராவை மிகவும் மதிக்கிறேன்.''

● **தினசரி நாடாளுமன்றத்துக்குச் செல்வீர்களா?**

''ஆமாம். உன்னிப்பாகக் கவனிப்பேன். குறிப்புகளும் எடுத்துக் கொள்ளுவேன். சீரியஸாக ஆராயாமல், அபத்தமாக முடியும் விவாதங்களைக் கேட்கும் போது எரிச்சலாக இருக்கும். நரசிம்மராவ் நாடாளுமன்றத்துக்குப் பெரும்பாலும் தினசரி வந்து விடுகிறார். நடவடிக்கைகளைக் கவனித்துப் பேச வேண்டிய போது பேசுகிறார். இந்திராவும் சரி, ராஜீவும் சரி, வெகு அபூர்வமாகத் தான் நாடாளுமன்றத்துக்கு வந்து கொண் டிருந்தார்கள்.''

● **இத்தனை அரசியல் நடவடிக்கைகளை நேரில் பார்த்துவருகிறீர்களே, ஒரு சிறந்த அரசியல் நாவல் ஏன் எழுதக்கூடாது?**

"I would love to. நிச்சயம் எழுதுவேன். ஆனால் ஷோபா டே மாதிரி அல்ல.''

● **வேண்டாமே, நயன்தாரா சைகல் மாதிரி எழுதலாமே?**

''குட் ஐடியா. நிச்சயம், நிச்சயம் எழுதுவேன். இதற்காகவே நேரத்தைத் தனியாக ஒதுக்கி வைத்துக் கொண்டு எழுதுவேன்.''

– சாருகேசி





# படா ஷோக்கான சவாரி!

''இன்னா நைனா! பேஜாராகீதே! நம்ம பொயப்ப இந்த வெள்ளைக்காரங்க வந்து கெட்டுடுவாங்க போல கீது...''

''ஐயோ! நீ இன்னா இது நம்மூருன்னு நெனக்கினியா. இல்லை அமாசி - இது சீமையில புட்ச படம்...''

''அட எங்கொப்புரானே! எந்தூரு இது...?''

''அதான் - காந்தி காலத்துல நம்மளை ஆண்டானே இங்கிலீஷ்காரன் - அவன் ஊராம் - பிரிட்டன்னு சொல்றாங்க. அங்கே 'பிரைடன்'னு பீச்சாங்கரை ஓரமா நம்ம மெரீனா கணக்கா பீச்க இருக்குதாம். அங்க லட்சக் கணக்கா ஜனம் வந்து காத்து வாங்குமாம் சீசன்ல...''

''ஆங்...?''

''அந்த ஜனத்தையெல்லாம் ஏத்திகினு ஜாலியா சுத்தி காட்றதுக்காக அந்த ஊர்ல ரிக்ஷா கம்பெனி ஆரம்பிச்சக்கிறானாம்...''

''பாத்தா நம்மூரு ஜாம்பஜார் வண்டி கணக்காவே கீதே...''

''அட ஆமாண்டா சோமாறி! நம்ம மெட்ராஸ் கம்பேனிக்காரன்தான் அங்க

ரிக்ஷாவை வெள்ளக்காரன்
கம்பேனிக்கு வித்துடுறான்.
அவுங்கூரு காசுக்கு மூவாயிரம் -
பவுண்டாமே - குடுத்து.
அந்த வண்டி
வாங்கிக்கிறாங்க...''

''ஏன் நைனா! அந்தூர்லதான் படா
ஷோக்கான காரும் பிளேனும்
ஓடுதாமே... போயும் போயும் நம்ம
ரிக்ஷா வண்டியை
வாங்கிக்கிறாங்களே...''

''யார்றாவன் வெவரம்
புரியாத பேஜாரு பண்ணிக்கிட்டு...
அவனுங்களுக்கு நம்மூரு
பொருளு மேல ஒரு பாசம்.
இந்தியாவை ஆட்சி பண்ண
ஞாபகமெல்லாம் வரும்...
அதுக்குத்தான் நம்மூரு புல்லட்
மோட்டார் சைக்கிளும்
அம்பாஸிடர் காரும் கூட
சில பயலுக அங்க வாங்கி
ஓட்டறாங்களாம்.
இப்ப ரிக்ஷா சேறு போல...
அதுவுமில்லாத.. ரிக்ஷா
மத்த வண்டி மாதிரி
குப்பு குப்புனு பொகை வுடாது.

அதனால காத்தை மூக்கால
இழுக்கோயில பொகை ஏறாது;
பீச்சல வீசற உப்பங்காத்துதான்
ஜம்முனு உள்ள
ஏறுங்கறாங்களாம்.''

''எல்லாஞ்சரித்தான் நைனா...
ரிக்ஷா பின்னால நம்மூரு
ஆயிரம் விளக்கு கணக்காவே
கட்டடம் கீதே... அது எப்டி?
ட்ரிக்கு பண்ணி புட்கிறானா
போட்டோவ...?''

''இல்லடா அமாசி! அந்தூரு
கட்டடந்தான் அது.
நம்மூரு கணக்கா கட்டனும்னே
கட்டிருக்கான்...''

''இது நல்ல டமாஷு* நைனா.
நம்மூரு புள்ளைங்க அவனுங்கள
மாதிரி ஆடி, பாடி, கொறாய்
மாட்டிக்கறாங்க. அவங்கூர்ல
இன்னான்னா நம்மூரு மாதிரி
கட்டடம், ரிக்ஷா...!''

உரையாடல் : கற்பனை

தகவல்கள் (உண்மை) நன்றி :
சண்டே

# சிவகாமியின் சபதம்

## இருபத்தெட்டாம் அத்தியாயம்
## விழாவும் விபரீதமும்

எத்தனையோ நூற்றாண்டு காலமாக நெடிது வளர்ந்து நீண்டு படர்ந்து ஓங்கித் தழைத்திருக்கும் ஆல விருக்ஷத்தின் காட்சி அற்புதமானது. அத்தகைய ஆலமரத்தின் விழுதுகள் காரணமாகத் தாய் மரத்தைச் சேர்ந்தாற்போல் கிளை மரங்கள் தோன்றித் தனித்த மரங்களைப் போலவே காட்சி தருவதும் உண்டு. ஸநாதன ஹிந்து மதமாகிய ஆலமரத்திலிருந்து அவ்விதம் விழுது இறங்கி வேர் விட்டுத் தனி மரங்களாகி நிற்கும் சமயங்கள் பௌத்தமும் சமணமும் ஆகும். அவ்விரு சமயங்களும் பழைய காலத்தில் பாரத நாட்டில் கலைச் செல்வம் பெருகியதற்குப் பெரிதும் காரணமாயிருந்தன.

அஜந்தா மலைப் பிராந்தியத்துக்குள்ளே மனிதர்கள் எளிதில் எட்ட முடியாத அந்தரங்கமான இடத்தில் மலையைப் பிளந்து கொண்டு பாதிமதியின் வடிவமாகப் பாய்ந்து சென்ற நதிக்கரையிலே இன்றைக்கு இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னால் புத்த பிக்ஷுக்கள் கருங்கற் பாறைகளைக் குடைந்து புத்த சைத்யங்களையும் விஹாரங்களையும் அமைக்கத் தொடங்கினார்கள். அது முதல் இரண்டாவது புலிகேசிச் சக்கரவர்த்தியின் காலம் வரையில், அதாவது ஏறக்குறைய அறுநூறு ஆண்டு காலம் அந்த அந்தரங்கப் பிரதேசத்தில் அற்புதமான சிற்ப சித்திரக் கலைகள் வளர்ந்து வந்தன. அழியாத கல்லில் அமைத்த சிலை வடிவங்களும், அமர வர்ணங்களில் தீட்டிய ஓவிய உருவங்களும் பல்கிவந்தன. பார்ப்போரின் கண்களின் மூலம் இருதயத்துக்குள்ளே பிரவேசித்து அளவளாவிப் பேசிக் குலாவும் தேவர்களும் தேவியர்களும் வீரர்களும் வீராங்கனைகளும் சௌந்தரிய புருஷர்களும் அழகே உருவமான நாரீமணிகளும் சைத்ரிக பிரம்மாக்களால் அங்கே சிருஷ்டிக்கப்பட்டு வந்தார்கள்.

அவ்வாறு அஜந்தாவிலே புதிய கலை சிருஷ்டி ஆரம்பிக்கப்பட்ட நாளிலிருந்து அந்தப் பிரதேசம் கண்டிராத கோலாகலத் திருவிழா புலிகேசிச் சக்கரவர்த்தியின் ஆட்சி தொடங்கிய முப்பத்தாறாவது வருஷத்தில் அங்கு மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதுவே அந்தச் சளுக்கப் பேரரசன் ஆட்சியின் கடைசி ஆண்டுமாகும்.

பழைய பாரத நாட்டில் இராஜாங்கங்களும் இராஜ வம்சங்களும் மாறிய போது சமயங்களுடைய செல்வாக்கு மாறுவதும் சர்வசாதாரணமாயிருந்தது. இந்த நாளில் போலவே அந்தக் காலத்திலும் விசால நோக்கமின்றிக் குறுகிய சமயப் பற்றும் துவேஷ புத்தியும் கொண்ட மக்கள் இருக்கவே செய்தார்கள். சமரச புத்தியுடன் சகல மதங்களையும் ஒருங்கு நோக்கிக் கலைகளை வளர்த்து நாட்டிற்கே மேன்மையளித்த புரவலர்களும் அவ்வப்போது தோன்றினார்கள்.

நம்முடைய கதை நடந்த காலத்தில் வடக்கே ஹர்ஷவர்த்தனரும், தெற்கே மகேந்திர பல்லவர், மாமல்ல நரசிம்மர்

அமரர் கல்கி




● தக்ஷிண பாரத தேசத்தின் சரித்திரத்தில் பல்லவ சக்கரவர்த்தி மாமல்ல நரசிம்மரின் வாதாபிப் படையெடுப்பு பிரசித்தி பெற்றது. கி. பி. 642 - ஆம் ஆண்டில் பல்லவ சைன்யம் சளுக்க சாம்ராஜ்யத்தின் தலைநகரான வாதாபியைக் கைப்பற்றி அதைத் தீயிட்டு அழித்ததாகச் சரித்திரம் கூறுகின்றது. அந்தக் காலத்துச் சரித்திரத்தில் பிரசித்தியடைந்த தென்னாட்டு ஸ்தலங்கள் சிலவற்றை மேலேயுள்ள படத்தில் காணலாம்.

ஆகியோர்களும் அத்தகைய சமரச நோக்கங் கொண்ட பேரரசர் திலகங்களாகப் பாரத நாட்டில் விளங்கினார்கள்.

வாதாபிப் புலிகேசிச் சக்கரவர்த்தியும் காஞ்சிப் படையெடுப்பிலிருந்து திரும்பி வந்த பிறகு, நாளடைவில் அத்தகைய பெருந்தகையாரில் ஒருவரானார். அஜந்தா புத்த சங்கிராமத்துக்கு அவர் அளவில்லாத கொடைகளை அளித்துக் கலை வளர்ச்சியில் ஊக்கம் காட்டி வந்தார். இது காரணமாக, அஜந்தாவின் புத்தபிக்ஷுக்கள் அறுநூறு வருஷமாக அங்கு நடவாத காரியத்தைச் செய்யத் தீர்மானித்தார்கள். அதாவது புலிகேசிச் சக்கரவர்த்தியை அஜந்தாவுக்கு அழைத்து உபசரிக்கவும் அது சமயம் சிறப்பாகக் கலை விழாக் கொண்டாடவும் ஏற்பாடு செய்தார்கள்.

சக்கரவர்த்தியும் அவருடைய பரிவாரங்களும் வந்து சேர்வதற்காகக் காடு மலைகளைச் செப்பனிட்டு இராஜ பாட்டை போடப்பட்டது. அந்தப் பாதை வழியாக யானைகளிலும் குதிரைகளிலும் சிவிகைகளிலும் ஏறிச் சக்கரவர்த்தியும் அவருடைய

பரிவாரங்களும் மந்திரி தந்திரிகளும் சேனாபதிகளும் மற்றும் சளுக்க சாம்ராஜ்யத்தின் பிரசித்த கவிஞர்களும் கலை நிபுணர்களும் அயல்நாடுகளிலிருந்து வந்திருந்த விசேஷ விருந்தாளிகளும் மேற்படி கலை விழாவுக்காக அஜந்தா வந்து சேர்ந்தார்கள்.

அவர்களனைவரும் அஜந்தா புத்த பிக்ஷுக்களால் இராஜோபசார மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டார்கள். வந்த விருந்தாளிகள் கும்பல் கும்பலாகப் பிரிந்து ஒவ்வொரு சைத்யத்துக்கும், விஹாரத்துக்கும் சென்று ஆங்காங்கே அமைக்கப்பட்டிருந்த சிற்பங்களையும் சித்திரங்களையும் பார்த்துக் களித்துக் கொண்டு வந்தார்கள்.

நல்ல வெயில் எரிந்த உச்சி வேளையிலேதான் விஹாரங்களின் உட்சுவர்களில் தீட்டியிருந்த உயிரோவியங்களைப் பார்ப்பது சாத்தியமாகையால் விருந்தாளிகள் அனைவரும் அன்றிரவு அங்கேயே தங்கியிருந்து மறுநாளும் மேற்படி சித்திரக்காட்சிகளைப் பார்த்து விட்டுப் போவது என்று ஏற்பாடாகியிருந்தது.

சக்கரவர்த்தியின் அன்றைய முக்கிய அலுவல்கள் எல்லாம் முடிந்த பிறகு பிற்பகலில் சிரமப் பரிகாரமும் செய்து கொண்டாயிற்று.

மாலைப் பொழுது வந்தது. மேற்கே உயரமான மலைச் சிகரங்களுக்குப் பின்னால் சூரியன் மறைந்து கீழே கீழே போய்க் கொண்டிருந்தது. அம்மலைச் சிகரங்களின் நிழல்கள் நேரமாக ஆகக் கிழக்கு நோக்கி நீண்டு கொண்டே வந்தன. கிழக்கேயிருந்த சில உயர்ந்த சிகரங்களில் படிந்த மாலைச் சூரியனின் பொன் கிரணங்கள் மேற்சொன்ன கரிய நிழல் பூதங்களால் துரத்தப்பட்டு அதிவேகமாகக் கீழ்த்திசையை நோக்கிப் பிரயாணம் செய்து கொண்டிருந்தன.

மலையை அர்த்த சந்திர வடிவமாகப் பிளந்து கொண்டு சென்ற வாகோரா நதியின் வெள்ளமானது ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் ஆங்காங்கு துள்ளி விளையாடிக் கொண்டும் அந்த விளையாட்டிலே விழுந்து எழுந்து இரைந்து கொண்டும் அதிவிரைவாகச் சென்று கொண்டிருந்தது.

சரிவான பாறைச் சுவர்களிலே கண்ணுக் கெட்டிய தூரம் பாரிஜாத மரங்கள் இலையும் பூவும் மொட்டுக்களுமாய்க் குலுங்கிக் கொண்டிருந்தன. அவற்றின் இடையிடையே சரக்கொன்றை மரங்கள் கண்ணைப் பறித்த பொன்னிறப் பூங்கொத்துக்களைச் சரம் சரமாகத் தொங்க விட்டுக் கொண்டு பரந்து நின்றன.

நதி ஓரத்துப் பாறை ஒன்றில் இரண்டு கம்பீர ஆகிருதியுள்ள புருஷர்கள் அமர்ந்து சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள்.

சற்று அருகில் நெருங்கிப் பார்த்தோமானால் அவர்கள் புலிகேசிச் சக்கரவர்த்தியும் நாகநந்தி பிக்ஷுவுந்தான் என்பதை உடனே தெரிந்து கொள்வோம்.

முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பு எந்த வாகோரா நதிக்கரையின் பாறையின் மேல் உட்கார்ந்து அண்ணனும் தம்பியும் தங்கள் வருங்காலப் பகற்கனவுகளைப் பற்றி சம்பாஷித்தார்களோ, வாதாபி சிம்மாசனத்தைக் கைப்பற்றிச் சளுக்கராஜ்யத்தை மகோந்நத நிலைக்குக் கொண்டு வருவது பற்றிப் பற்பல திட்டங்களைப் போட்டார்களோ, அதே பாறையில் இன்று அவர்கள் உட்கார்ந்து சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால், அன்றைக்கும் இன்றைக்கும் அவர்களுடைய தோற்றத்திலேயும் சம்பாஷணையின் போக்கிலேயும் மிக்க வித்தியாசம் இருந்தது. பிராயத்தின் முதிர்ச்சியோடு கூட அவர்களுடைய வெளி உலக அநுபவங்களும் அக உலக அநுபவங்களும் அவர்கள் ஈடுபட்ட கோரமான இருதயப் போராட்டங்களும் ஆசாபாசங்களும் கோபதாபங்களும் சேர்ந்து, முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் அதே நதியில் பிரதிபலித்த பால்வடியும் இளம் முகங்களைக் கோடுகளும் சுருக்கங்களும் விழுந்த கொடூர முகங்களாகச் செய்திருந்தன.

முக்கியமாக, நாகநந்தி பிக்ஷுவின் முகத்தில் கோபம் கொதித்துக் கொண்டிருந்தது. இரத்தம் கசிவது போல் சிவந்திருந்த கண்களில் அடிக்கடி கோபாக்கினியின் ஜுவாலை மின்னலைப் போல் பிரகாசித்தது.

அவர் கூறிய வார்த்தை ஒவ்வொன்றும் நெருப்பைக் கக்கிக் கொண்டு பாயும் அக்னியாஸ்திரத்தைப் போல் புறப்பட்டுச் சீறிக் கொண்டு பாய்ந்தன.

''ஆ தம்பி! என்னுடைய விருப்பம் என்னவென்றா கேட்கிறாய்; சொல்லட்டுமா? இந்தக் கணத்தில் பயங்கர பூகம்பம் ஏற்பட்டு இந்த அஜந்தா மலையானது அப்படியே அதல பாதாளத்தில் அமிழ்ந்து விட வேண்டுமென்பது என் விருப்பம். ஆயிரம் இடிகள் சேர்ந்தாற்போல் விழுந்து இங்குள்ள சைத்யங்களையும், விஹாரங்களையும், இங்கே வசிக்கும் பிக்ஷுக்களையும், உன்னையும் உன் பரிவாரங்களையும் என்னையும் அடியோடு அழித்து நாசமாக்க வேண்டுமென்பது என் விருப்பம்!'' என்றார் நாகநந்தி.




இதைக் கேட்ட புலிகேசி, சாவதானமாக, "அடிகளே! அஜந்தாவுக்கு வந்தது உண்மையிலேயே பலன் தந்து விட்டது. எனக்குச் சொல்ல முடியாத சந்தோஷமாயிருக்கிறது. கொஞ்ச காலமாகத் தாங்கள் ரொம்பவும் பரம சாதுவாக மாறிக் கொண்டு வந்தீர்கள். இன்றுதான் பழைய நாகநந்தி பிக்ஷுவாகக் காட்சி அளிக்கிறீர்கள்!" என்று சொல்லிப் புன்னகை புரிந்தார்.

"ஆம் தம்பி, ஆம்! இன்று பழைய நாகநந்தி ஆகியிருக்கிறேன். அதன் பலனை நீயே அநுபவிக்கப் போகிறாய் ஜாக்கிரதை!" என்று பிக்ஷு நாக சர்ப்பத்தைப் போல் சீறினார்.

"அண்ணா! என்னை என்ன செய்வதாக உத்தேசித்திருக்கிறாய்?" என்று புலிகேசி கேட்டார்.

"இன்று இராத்திரி நீ தூங்கும் போது இந்த விஷக் கத்தியை உன் மார்பிலே பாய்ச்சி உன்னைக் கொன்று விடப் போகிறேன்..."

புலிகேசி "ஹா ஹா ஹா" என்று சிரித்தார். பிறகு, "அப்புறம் என்ன செய்வீர்கள்? அதாவது என் பிரேதத்தை என்ன செய்வதாக உத்தேசம்?" என்று பரிகாசக் குரலில் வினவினார்.

"இந்த நதியில் கொண்டு வந்து போட்டு விடுவேன்."

"அப்புறம்? கேட்கிறவர்களுக்கு என்ன சொல்லுவீர்கள்?"

"ஒருவரும் கேட்க மாட்டார்கள்!"

"ஏன் கேட்க மாட்டார்கள்? அஜந்தாவுக்கு வந்த சக்கரவர்த்தி இரவுக்கிரவே எப்படி மறைந்தார் என்று சளுக்க

ராஜ்யத்தின் பிரஜைகள் கேட்க மாட்டார்களா?''

''கேட்கமாட்டார்கள்! சக்கரவர்த்தி மறைந்தது அவர்களுக்குத் தெரிந்தால் அல்லவா கேட்பார்கள்? ஒருவருக்கும் அது தெரியப் போவதில்லை.''

''அது எப்படி?''

''ஒரு சமயம் நான் உன் உடைகளைத் தரித்து அடிபட்டுச் சித்திரவதைக்குள்ளாகி உன் உயிரைக் காப்பாற்றினேன். இன்னொரு சமயம் நான் உன்னைப் போல் வேஷம் தரித்துப் போர்க்களத்தில் நின்று மகேந்திரனோடு போராடி அவன் மீது விஷக் கத்தியை எறிந்து கொன்றேன். அதே உருவப் பொருத்தம் இப்போதும் எனக்குத் துணை செய்யும். நீ மறைந்ததையே ஜனங்கள் அறிய மாட்டார்கள். நாகநந்தி பிக்ஷு மறைந்ததைப் பற்றி யாரும் கவனிக்க மாட்டார்கள். நியாயமாக இந்தச் சளுக்க ராஜ்யம் எனக்கு உரியது. நான் மனமார இஷ்டப்பட்டு உனக்கு இந்தச் சாம்ராஜ்யத்தைக் கொடுத்தேன். சென்ற முப்பத்தைந்து வருஷமாக உன்னுடைய க்ஷேமத்தையும் மேன்மையையும் தவிர வேறு எண்ணமே இல்லாமலிருந்தேன். ஆனால், நெஞ்சில் ஈவிரக்கமற்றவனும், சகோதர வாஞ்சையற்றவனும் நன்றியற்ற துரோகனுமான நீ என்னை இன்று பலர் முன்னிலையில் அவமானப் படுத்தினாய்! ஆ! இந்தப் பூமி பிளந்து உன்னை இன்னும் விழுங்கவில்லையே என்பதை நினைத்துப் பார்த்தால் எனக்குப் பரம ஆச்சரியமாயிருக்கிறது!''

''அண்ணா! அண்ணா! நீ என்ன சொல்கிறாய்? என்னை இப்படியெல்லாம் சபிக்க உனக்கு எப்படி மனம் வருகிறது? உன்னை என்ன அவமானப்படுத்தி விட்டேன்?''

''இன்னும் என்ன அவமானம் செய்ய வேண்டும்? சிவகாமி உன் காலில் விழுந்து மன்னிப்புக் கோரியதாக அழியாத வர்ணத்தில் சித்திரம் எழுதச் செய்ததைக் காட்டிலும் வேறு என்ன அவமானம் எனக்கு வேண்டும்? இதற்காகவா என்னை நீ இங்கே அழைத்து வந்தாய்? இதற்காகவா இந்தக் கலைவிழா நடத்தினாய்? ஆகா! துஷ்ட மிருகமே! ஒரு கலையைக் கொண்டு இன்னொரு கலையை அவமானப்படுத்திய உனக்காக எரிவாய் நகரம் காத்திருக்கிறது, பார்!''

''அண்ணா! உனக்கு என்ன வந்து விட்டது! அந்தப் பல்லவ நாட்டு நடனக்காரி உன்னை என்ன செய்து விட்டாள்? உடல் இரண்டும் உயிர் ஒன்றுமாக இருந்த சகோதரர்களை இப்படிப் பிரிப்பதற்கு அவளிடம் அப்படி என்ன சக்தி இருக்கிறது? அண்ணா! அண்ணா! என் முகத்தைப் பார்த்துச் சொல்லு! நமது முப்பத்தைந்து வருஷத்து அன்யோன்ய சிநேகத்தை நினைத்துக் கொண்டு சொல்லு! அன்றொரு நாள் இதே பாறை மீது உட்கார்ந்து நாம் கட்டிய ஆகாசக் கோட்டைகளையும், அவற்றையெல்லாம் பெரும்பாலும் காரியத்தில் நிறைவேற்றி வைத்ததையும் எண்ணிப் பார்த்துச் சொல்லு!... இந்த தெய்வீக வாதோர நதியின் சாட்சியாக, இந்தப் பர்வத சிகரங்கள் சாட்சியாக, ஆகாசவாணி பூமிதேவி சாட்சியாகச் சொல்லு! என்னைக் காட்டிலும் உனக்கு அந்தக் காஞ்சி நகரத்துப் பெண் மேலாகப் போய் விட்டாளா? அவளுக்

காகவா இப்படியெல்லாம் நீ எனக்குச் சாபம் கொடுக்கிறாய்?''

முன்னைக் காட்டிலும் கடினமான, குரோதம் நிறைந்த குரலிலே புத்த பிக்ஷு கூறினார் : ''ஆமாம், ஆமாம்! புத்த பகவானுடைய பத்ம பாதங்கள் சாட்சியாகச் சொல்லுகிறேன். சங்கத்தின் மீதும் தர்மத்தின் மீதும் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். உன்னைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு எனக்குச் சிவகாமி மேலானவள்தான்! நீயும் உன் சாம்ராஜ்யமும் உன் புத்திரமித்திரர்களும் அவளுடைய கால் தூசுக்குச் சமமாக மாட்டீர்கள். அவளை அவமானப் படுத்திய நீயும் உன் சந்ததிகளும் சர்வ நாசமடையப் போகிறீர்கள்! அந்தச் சரணாகதி சித்திரத்தை எழுதிய சித்திரக் கலைஞனின் கதி என்ன ஆயிற்று என்று உனக்குத் தெரியுமா?''

''அடிகளே! அந்தத் துர்ப்பாக்கியனைத் தாங்கள் என்ன செய்து விட்டீர்கள்?''

புத்த பிக்ஷு பயங்கரமான சிரிப்பு ஒன்று சிரித்தார்.

''பார்த்துக் கொண்டேயிரு! இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் யாராவது வந்து சொல்வார்கள்!''

''அண்ணா! ஒன்று நான் தெரிந்து கொண்டேன். இளம் பிராயத்திலிருந்தே பிரம்மசரியத்தையும் பிக்ஷு விரதத்தையும் மேற்கொள்வது ரொம்பத் தவறானது. இல்வாழ்க்கையின் இன்ப துன்பங்களை அநுபவித்து விட்டுத் தொலைத்த பிறகுதான் சந்நியாசம் மேற்கொள்ள வேண்டும். வாலிபத்திலேயே வாழ்க்கை வைராக்கியம் கொள்கிறவர்கள் உன்னைப் போல்தான் பிற்காலத்தில் யாராவது ஒரு மாயக்காரியின் மோக வலையில் விழுந்து பைத்தியமாகி விடுகிறார்கள்!''

''புலிகேசி! இத்தனை நேரம் பொறுத்திருந்தேன். இனிமேல் சிவகாமியைப் பற்றி நீ ஒரு வார்த்தை சொன்னாலும் என்னால் பொறுக்க முடியாது.''

''அடிகளே! சிவகாமி தேவியிடம் தாங்கள் இவ்வளவு பரிவு காட்டுகிறீர்களே? அவளுடைய கௌரவத்தை இவ்வளவு தூரம் காப்பாற்றுகிறீர்களே? தங்களிடம் சிவகாமி தேவிக்கு இவ்வளவு தூரம் பரிவு இருக்கிறதா? தாங்கள் அவளிடம் வைத்திருக்கும் அபிமானத்தில் ஆயிரத்தில் ஒரு பங்காவது அவளுக்கு உண்டா?...''

புலிகேசி சக்கரவர்த்தியின் மேற்படி கேள்வி புத்த பிக்ஷுவின் உள்ளத்தை வாள் கொண்டு அறுப்பது போல் அறுத்தது என்பதை அவருடைய முகக் குறி காட்டியது. அந்தச் சொல்ல முடியாத வேதனையை வெகு சீக்கிரத்திலேயே நாகநந்தி சமாளித்துக் கொண்டு திடமான குரலில், ''அந்தக் கேள்வி கேட்க உனக்கு யாதொரு பாத்தியதையும் இல்லை. ஆனாலும் சொல்லுகிறேன். சிவகாமி உன்னைப் போல் அவ்வளவு கல்நெஞ்சம் கொண்டவள் அல்ல. அவளுக்கு என் பேரில் பிரியம் இருக்கத்தான் செய்கிறது'' என்றார்.

''அண்ணா? நீ இப்படி ஏமாறக் கூடியவன் என்று கனவிலும் நான் எதிர்பார்க்கவில்லை!''

''தம்பி! நான் ஏமாறவில்லை. நாம் அஜந்தா யாத்திரை கிளம்பிய அன்று இரவு சிவகாமி என் உயிரைக் காப்பாற்றினாள்.''

''அது என்ன? உன் உயிருக்கு அப்படி என்ன ஆபத்து வந்தது, சிவகாமி காப்பாற்றுவதற்கு?''

''இந்த விஷக் கத்தியால் என்னை நானே குத்திக் கொள்ளப் போனேன். சிவகாமி என் கையைப் பிடித்து என்னைக் காப்பாற்றினாள்'' என்று புத்த பிக்ஷு கூறிய போது, அவரது அகக் கண்முன்னால் அந்தக் காட்சி அப்படியே தோன்றியது. அவருடைய கண்களில் கண்ணீர் ததும்பிற்று.

புலிகேசி புன்னகை புரிந்து, ''ஐயோ! மகா மேதாவியான உன்னுடைய புத்தியா இப்படி மாறிப் போய் விட்டது? சிவகாமி எதற்காக உன் உயிரைக் காப்பாற்றினாள், தெரியுமா? அவளுடைய காதலன் மாமல்ல

## அருள்வாக்கு

''அரியும் சிவனும் ஒன்னு; அறியாதவன் வாயிலே மண்ணு'' என்பது நம் எல்லோருக்கும் தெரிந்தது. இதிலே 'அறியாதவன்' என்பதில் வல்லின ''றி''யை இடையினமாக மாற்றி ''அரியாதவன்'' என்று சொல்வார்கள். ஹரியாகிய யாதவ குலக் கண்ணன் என்று அர்த்தம். அவன் வாயிலே மண்ணைப் போட்டுக் கொண்டு விட்டு யசோதைக்கு லோகம் முழுவதையும் காட்டினான் அல்லவா; அதைத்தான் 'அரியாதவன் வாயில் மண்ணு' என்பது.

''சரி, அரியும் சிவனும் ஒன்று என்று சொல்லி விட்டு இப்படி ஒன்று - இவர்களிலே ஹரி லோகம் முழுவதையும் காட்டினவன் என்று எதற்காகச் சொல்ல வேண்டும்?''

''எதற்காகவா? இதிலேயும் பெரிய தத்வம் இருக்கிறது. ஒரே பிரம்மம்தான் ஹரி, சிவன் இரண்டு பேரும். அதனாலே அவர்கள் ஒன்றேதான். ஆனால் அந்த ஒரே பிரம்மத்தை நிர்குணம், ஸகுணம் என்று இரண்டு நிலைகளில் நாம் பாவிக்க வேண்டியதாயிருக்கிறது. இந்த இரண்டில் லோக வ்யவஹாரம் அடிபட்டுப்போன நிர்குணம் தான் சிவன். லோக வ்யவஹாரத்தை நடத்தும் ஸகுணமே ஹரி. மண்ணைத்



நின்று லோகம் முழுவதையும் தன் வாயில் அடக்கி இருப்பதாக அவன் காட்டின போது இந்த உண்மையைத்தான் உருவகப் படுத்தி இருக்கிறான். 'அரியாதவன் வாயில் மண்ணு' என்று சொல்லி இதை ஞாபகப்படுத்தி விட்டதால் முதல் வரியில் சொன்ன 'அரியும் சிவனும்' என்பதில் விட்டுப் போன சிவன் நிர்குணம் என்பதையும் சொன்னதாகி விடுகிறது.''

'றி'யை 'ரி'யாகக் கூட மாற்றாமல் அறியாதவன் என்ற ஒற்றை வார்த்தையை 'அறி' 'யாதவன்' என்று இரண்டாகப் பண்ணிக் கொண்டாலே போதும். 'அறி, யாதவன் வாயிலே மண்ணு' என்றாலே அரியும் சிவனும் ஒன்னானாலும் இவர்களில் யாதவனாக வந்து மண்ணைத் தின்னவன் ஸகுண ப்ரம்மம் என்று அறி; அதனால் இன்னொருவன் நிர்குணம் என்றும் 'அறி' என்று அர்த்தமாகி விடும்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

னுடைய கையினால் நீசாக வேண்டும் என்பதற்காகத்தான். அந்த மூடப்பெண் இன்னமும் அப்படிக் கனவு கண்டு கொண்டிருக்கிறாள்!'' என்றார்.

மேலே விவரித்த அண்ணன் தம்பி சம்பாஷணை நேயர்களுக்கு நன்கு விளங்கும் பொருட்டு அன்று மத்தியானம் நடந்த ஒரு சம்பவத்தை விவரிக்க வேண்டும். புலிகேசிச் சக்கரவர்த்தியும் புத்த பிக்ஷுவும் சீன யாத்திரிகரும் மற்றும் சாம்ராஜ்யத்தின் பிரமுகர்களும் ஒரு கும்பலாக அஜந்தாவின் அதிசயச் சித்திரங்களைப் பார்வையிட்டுக் கொண்டு வந்தார்கள். சைத்தியங்கள், விஹாரங்கள் இவற்றின் உள்சுவர்களிலே புத்த பகவானுடைய தெய்வீக வாழ்க்கை வரலாறும், அவருடைய பூர்வ அவதாரங்களின் சம்பவங்களும் சித்திரிக்கப்பட்டிருந்தன. வெளித் தாழ்வாரச் சுவர்களிலோ அந்தக் காலத்துச் சமூக வாழ்க்கைச் சித்திரங்கள் சில காணப்பட்டன.

அப்படிப்பட்ட நவீன வாழ்க்கைச் சித்திரங்களில் புலிகேசி சக்கரவர்த்தியின் வாழ்க்கை சம்பந்தமான இரு முக்கிய சம்பவங்கள் சித்திரிக்கப்பட்டிருந்தன. அவற்றில் ஒன்று, புலிகேசிச் சக்கரவர்த்தி இராஜ சபையில் சிம்மாசனத்தில் கம்பீரமாக வீற்றிருக்க, பாரசீக மன்னனிடமிருந்து வந்த தூதர்கள் சக்கரவர்த்திக்குக் காணிக்கைகள் சமர்ப்பித்த காட்சியாகும்.

மேற்படி காட்சி எல்லாருக்கும் மிக்க குதூகலத்தை அளித்ததில் வியப்பொன்றுமில்லை. ஆனால், மற்றொரு சித்திரம் அப்படிக் குதூகலத்தை உண்டாக்குவதற்குப் பதிலாக அனைவருக்கும் ஒருவித அசந்துஷ்டியை உண்டாக்கிப் பின்னால் பெரும் விபரீதம் நேர்வதற்கும் காரணமாயிற்று.

அந்த விபரீதச் சித்திரம், புலிகேசிச் சக்கரவர்த்தியின் பாதங்களில் ஒரு நடனக் கலைவாணி தலையை வைத்து வணங்கி மன்னிப்புக் கோருவது போல் அமைந்த சித்திரந்தான். இதைத் தீட்டிய ஓவியக் கலைஞன் சிறந்த மேதாவி என்பதில் சந்தேகமில்லை. புலிகேசியின் முகத்தையும் தோற்றத்தையும் அமைப்பதில் அவன் கற்பனா சக்தியின் உதவியைப் பயன்படுத்தியிருந்தான். அந்தச் சித்திரத்தில் புலிகேசி துஷ்ட நிக்கிரஹம் செய்வதற்கு முனைந்திருக்கும் தேவேந்திரனையொத்துக் கோப சௌந்தரியம் பொருந்தி விளங்கினான். கீழே கிடந்த பெண்ணின் தோற்றத்தில் அளவில்லாத சோகத்தையும் மன்றாடி மன்னிப்புக் கோரும் பாவத்தையும் சித்திரக் கலைஞன் வெகு அற்புதமாக வரைந்திருந்தான். பக்கத்திலே நின்ற சேடிப் பெண்களின் பயந்த, இரக்கம் வாய்ந்த தோற்றத்தைக் கொண்டு அந்த நடனப் பெண்ணின் சரணாகதியைப் பன்மடங்கு பரிதாபமுள்ளதாகச் செய்திருந்தான்.

இவ்வளவுக்கும் பின்னால் சற்றுத் தூரத்திலிருந்து புத்த பிக்ஷு ஒருவர் கவலை தரும் பீதி முகத் தோற்றத்துடனே விரைந்து வருவதையும் காட்டியிருந்தான். அந்தப் பிக்ஷுவைப் பார்த்தவுடனேயே, அவர் மேற்படி நடனப் பெண்ணை இராஜ தண்டனையிலிருந்து காப்பாற்றுவதற்காகவே விரைந்து வருகிறார் என்ற எண்ணம் எல்லாருடைய மனத்திலும் உதயமாகும்படி இருந்தது. சித்திரங்களை விளக்கிக் கூறி வந்தவர் மேற்படி சித்திரத்தின் தாத்பரியத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் சொன்னவுடனேயே அங்கிருந்தவர்கள் அனைவரும் ஏக காலத்தில் நாகநந்தி பிக்ஷுவை நோக்கினார்கள். ஒரு கணநேரம் நாகநந்தியின் முகம் படம் எடுத்த பாம்பைப் போல் காட்சியளித்தது. அடுத்தகணம் நாகநந்தி தம்மை நூறு கண்கள் கூர்ந்து நோக்குகின்றன என்பதை உணர்ந்தார். உடனே அவருடைய முக பாவமும் முற்றிலும் மாறி அதில் புன்னகை தோன்றியது.

''அற்புதம்! அற்புதம்! இந்தச் சித்திரத்துக்கு இணையான சித்திரம் உலகத்திலேயே இருக்க முடியாது! என்ன பாவம்? என்ன கற்பனை? இதைத் தீட்டிய ஓவியப் பிரம்மா யார்? அவருக்குத் தக்க வெகுமதி அளிக்க வேண்டும்!'' என்று நாகநந்தி கூறினார்.

(தொடரும்)

சைக்கிளை உள்ளே நிறுத்திப் பூட்டியபோது கௌரி லைட்டைப் போட்டாள்.

மணி இரவு ஒன்பதரை ஆகிவிட்டதல்லவா எதிர்பார்த்துக் கொண்டே இருந்திருப்பாள். சோர்வாய்ப் படி ஏறி வந்தான்.

''என்னங்க இவ்வளவு நேரம்? கோயிலே சாத்திருப்பாங்களே இன்னேரம்!''

''சித்த வழியை விடறியா....?''

தாவிக் கொண்டு இவனிடம் வந்த பாலாஜியை அவன் அம்மா தோளிலேயே தள்ளிவிட்டு, செருப்பைக் கழற்றினான். நேராக உள்ளே போய் வேட்டியைக் கட்டிக் கொண்டு, கைகால் அலம்பிக் கொண்டு மாடிக்குப் போனான்.

''என்ன ரூபோ... என்ன காரணமோ.... சீ... குழந்தைகிட்ட கூடவா காட்டணும்...?'' முணு முணுத்துக் கொண்டு சாப்பாட்டுப் பாத்திரங்களைக் கொண்டு வந்து மாடியில் வைத்தாள் கௌரி.

அம்மாவின் இடுப்பிலிருந்து இறக்கி விடப்பட்ட இரண்டு வயது பாலாஜி ''அப்பா... அப்பா... நானு... ஆப்பிட்டுட்டேன்...'' என்று முகவாய்க் கட்டையைத் திருப்பியது.

''சாப்பிட்டாச்சில்ல... ஒரு இடத்தில உக்காரு....'' பிடித்து இழுத்து அழுத்தமாய் உட்கார வைத்தான். 'ஓ' என்று கத்திக் கொண்டே மற்றொரு வல்லரசிடம் தஞ்சம் புகுந்தான் பாலாஜி.

''போட்டுச் சாப்பிடுங்க... நீங்களே! வந்ததும் வராததுமா குழந்தையை ஏன் உதறுறீங்க...? அவனைத் தூங்கப் பண்ணிட்டு வரேன்....'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள். அவன் தனியே உட்கார்ந்திருந்தான்.

'சந்தமிகு செந்தமிழில் பாட்டுப் படித்தேன்... செந்தில் வளர் கந்தனிடம் தூது விடுத்தேன்...' என்று முனகலாய்ப் பாட்டு உள் அறையிலிருந்து கேட்டது.

சங்கருக்குச் சாப்பிடவே பிடிக்கவில்லை. சே! இப்படிச் சொன்னதற்கு இந்தக் குருக்கள், ''இன்னும் ஜாதகம் எழுதலையே சார், அடுத்த ஞாயிறு வாங்கோ''ன்னு சொல்லியிருக்கலாம் என்று பட்டது.

ஒரு தட்டுநிறைய நறுக்கிய மாம்பழத்துடன் கௌரி வந்து உட்கார்ந்தாள்.

''என்னங்க சொன்னாரு அவரு....? ஜாதகம் எழுதிட்டாராமா? போய் இரண்டு மணி நேரம் ஆகுது. கையில ஒண்ணும் கொண்டாரல!?''

''வழக்கம் போல அவர் இன்னும் எழுதி முடிக்கலை. ஆனா இன்னைக்கு ஜாதகப் பலன் சொன்னார். ஒரு சின்ன சீட்டுல குறிச்சிக்கிட்டு வந்திருக்கேன்.''

அவன் தட்டில் சாதமும் வத்தக்குழம்பும் போட்டுக் கொண்டு, பாத்திரத்தில் இருந்த அவியல் மொத்தத்தையும் சங்கர் தட்டில் கொட்டினாள்.

''எல்லாத்தையும் எனக்கே கொட்டு....! நீ ஒண்ணுந் திங்காத... அப்புறம் டாக்டர் வீட்டுக்குப் போகலாம்....'' முதலில் எரிந்து விழுந்து விட்டுப் பிறகு சொன்னான் :

''ஜாதகம் எல்லாம் நல்லாயிருக்காம்.



ஆயுக கெட்டியாம். ஜீவனத்துக்கு ஒண்ணும் குறையே இல்லியாம்....''

''அப்புறம் ஏன் மூஞ்சியைத் தொங்கப் போட்டுண்டு வந்தீங்க!; எரிஞ்சு விழுந்துக் கிட்டு. பாவம் செல்லம், 'அப்பா, அப்பா

சோம வள்ளியப்பன்

விட்டுட்டுப் போய்ட்டாங்கன்னு' மருகிப் போயிடுத்து தெரியுமா? நீங்க என்ன



டான்னா வந்ததும் வராததுமா அவன் மேல எரிஞ்சு விழுறீங்க...''

''அவன் ஜாதகத்துல ஒன்பதாம் எடத்துல சனி இருக்காராம்.''

''அதனால.... என்னவாம்?''

''அப்பாவுக்கு ஆகாதாம்.''

கௌரிக்கும் முகம் 'டக்'கென்று கன்றி விட்டது.

''ஆகாதுன்னா என்ன? மு ழு சா ா சொல்லித் தொலைங்களேன்!''

''எதுக்குக் கத்தறே இப்போ....?''

கௌரியின் 'ரியாக்ஷன்' பார்த்ததும் சங்கர் கொஞ்சம் குறைத்துக் கொண்டான்.

''அதெல்லாம் ஒண்ணுமில்ல. அப்பா புள்ளைக்குள்ள கொஞ்சம் மனஸ்தாபம் இருக்குமாம்....''

''அவ்வளவு தானே! வேறு ஒண்ணும் இல்லியே?''

''கொஞ்சம் பிரிஞ்சிருக்க வேண்டி வருமாம்.''

''பிரிஞ்சுன்னா?'' அவள் மு க த் தி ல் மீண்டும் கவலை.

''நல்ல வேளை சனிக்கு நேரா குரு இருக்காராம். அதுனால சனியோட வக்ரம் குறையுமாம். குரு பார்வை அங்க இல்லைன்னா, அப்பாவையே கூட....''

''சிவ சிவா... சித்த நிறுத்துறீங்களா!'' காதைப் பொத்திக் கொண்டு, ''குருதான் இருக்கார்ன்னு சொன்னீங்கல்ல? அப்புறம் என்ன இல்லைன்னான்னு.... கற்பனையெல்லாம் பண்ணிக்கிட்டு....'' அவளுக்குக் கண்கலங்கி விட்டது.

''அதெல்லாம் ஒண்ணுமில்லை. கொஞ்சம் ஒத்து வராதாம். அதுவும் முப்பத்தைஞ்சு வயசுக்கு மேலதானாம். அவனுக்கு இப்பத்தான் இரண்டாறது.''

**கௌ**ரி கையைக் கழுவிவிட்டு எழுந்து விட்டாள்.

அவளுக்குத் தெரியும், கணவன் சங்கரால் இந்த மாதிரி விஷயத்தைத் தாங்கிக் கொள்ள முடியாதென்று. அவனுக்கு மகன் பாலாஜி மேல் கொள்ளைப் பிரியம்.

''நீ அப்பா மாடா, அம்மா மாடா?'' என்ற கேள்விக்கு ''நானு அப்பா மாடு....'' என்று குழந்தை சொன்னதும் ஏதோ 'நீதான் அடுத்த மானேஜர்' என்று ஜி.எம்மே சொல்லிவிட்டது போல மகிழ்வான்.

கௌரி விடமாட்டாள். ''நீ அப்பா மாடு தானே? உனக்குப் பால் தரமாட்டேன், பிஸ்கட் கிடையாது ஒண்ணும் கிடையாது போ'' என்று பொய்யாகக் கோபிப்பாள்.

''இல்ல... நான் அம்மா மாடு...'' என்று குழந்தை சொன்னதும் சங்கர் முகம் வாடிவிடும். அப்படிப்பட்டவரிடம் போய் இந்தக் குருக்கள், உங்களுக்கும் மகனுக்கும் பகை அது இது என்றால் எப்படித் தாங்குவார்?

அதுதான் போகும்; கோவிலிலிருந்து வந்ததிலிருந்து குழந்தை மேல் சங்கடமாய் இருந்திருக்கிறார். அத்தனைப் பிரியம். சங்கரைப் பார்க்க அவளுக்குப் பாவமாய் இருந்தது.

**ச**ங்கரும் சாப்பிட்டுவிட்டு எழுந்தான். கையைக் கூடக் கழுவாமல், ''ஏய்... இங்க வா... மிச்சத்தையும் கேளு... பாலாஜிக்கு வாக்குல கக்கிரனாம். எல்லாரையும் பேச்சிலேயே மயக்கிடுவானாம்....'' என்றான்.

''அப்பா... ஜய்... மாம்பழம்....'' என்றபடி பாலாஜியும் வந்துவிட்டான். ''ஏய் திருடா...! எப்படிடா வந்த? உங்கம்மா உன்னைத் தூங்கப்பண்ணலே!....''

''டேய் இங்க வாடா... அப்பாவோட சண்டை போடுவியாடா?....'' குழந்தையின் தொப்பையில் வாயை வைத்து அழுத்தி ப்புர்ர்... என்று ஊதினான் சங்கர்.

''ஊ¯ஊ¯ம், மாத்தேன்'' என்றது குழந்தை.

''அவர் கிடக்குறாரு. என் செல்லம் என்னோட சண்டை போடுமான்ன?''

''எல்லாம் கிடக்கட்டும், நீங்க ரெண்டு பேரும் ஆயுசோட இருந்தா எனக்கு அதுவே போதும்....''

''எங்களுக்கு நீ இருந்தாப் போதும்...'' என்றபடி குழந்தையையும் சேர்த்துக் கொண்டு கௌரி கன்னத்தில் சடாரென்று முத்தமிட்டான் சங்கர்.

''சீ... எச்சல்...! சாப்பிட்ட கையைக் கூட கழுவாம....''

''அய்ய்... அப்பா முத்தங் குடுத்தா! முத்தங்குடுத்தா...!'' கையைத் தட்டியபடி ஓடினான் பாலாஜி.

ஜோசியர் எழுதிக் கொடுத்தனுப்பியிருந்த அந்த விவரச் சீட்டு, காற்றில் பறந்து மாடியிலிருந்து கீழே விழுந்ததை யாரும் கவனிக்கவில்லை.

''ஆபரேஷனை நினைச்சா, எனக்கு ரொம்பப் பயமா இருக்கு டாக்டர்...''

''முதல் ஆபரேஷன்னா எல்லாருக்குமே அப்படித்தான் இருக்கும்; அடுத்தடுத்த ஆபரேஷன்ல தைரியம் தன்னால வந்துடும் பாருங்க!''

- சீர்காழி வி. ரேவதி



# டி.வி. சினிமா

“லலிதா! ஓடி வா, ஓடி வா!” என்று குதிரைப் பந்தய மைதானத்தில் கூவுவது போல கூவினான் கணேசன்.

“என்னங்க, ஞாயித்துக் கிழமை ஒருநாள்தான் எனக்கு ரெஸ்ட். கொஞ்சம் லேட்டா எழுந்திருக்கலாம்னா ஏன் அலர்றீங்க,” என்று கத்தினாள் லலிதா.

“நான் சொல்ற நியூஸைக் கேட்டா எப்படி குதிப்பே தெரியுமா?”

“இப்ப விஷயம் என்னன்னு சொல்லப் போறீங்களா, இல்லையா?” என்று படுக்கையிலிருந்து உக்கிரத்துடன் லலிதா எழுந்து உட்கார்ந்தாள்.

“ஐயே, கோபத்தைப் பாரு, நீ ஊரெல்லாம் தேடி அலைஞ்ச கண்றாவிப் படமான 'அலமேலுவின் அற்புத சாகசங்கள்' படத்தை இன்னைக்குச் சாயந்திரம் டீவியிலே காண்பிச்சு போரடிக்கப் போறாங்களாம் என்று கணேசன் நிறுத்தியதும், ரப்பர் பந்து போல துள்ளிக் கொண்டு ஓடி வந்து கணேசனின் கையிலிருந்த பேப்பரைப் பிடுங்கினாள் லலிதா. ஜென்ம சாபல்யமே அடைந்தாற் போலிருந்தது அவளுக்கு. கல்யாணத்திற்கு முன்பே அந்தப் படத்தைப் பார்க்க ரொம்பவும் ஆசைப்பட்டாள் லலிதா. ஒரே வாரத்தில் தியேட்டரை விட்டே ஓடிவிட்ட அந்தப் படம் அதற்கப்புறம் எந்தத் தியேட்டரிலும் தலை காட்டவில்லை.

கல்யாணமான புதிதில் கணேசன் 'உனக்கு என்ன ஆசையிருந்தாலும் சொல்லு. நிறைவேற்றி வைக்கிறேன்' என்று தெரியாத்தனமாகக் கேட்டு விட்டான். 'அலமேலுவின் சாகசங்கள் படத்துக்குக்



கூட்டிட்டுப் போனாப் போதுங்க' என்று அவளும் தன் நிறைவேறாத ஆசையை வெளியிட்டாள்.

'ப்பூ இவ்வளவுதானே' என்று எளிதாகக் கேட்டு விட்டான் கணேசன். அப்புறம்தான் தெரிந்தது. அந்த ஊரில் மட்டுமல்ல, சுற்று வட்டாரத்தில் உள்ள எல்லாத் தியேட்டர்களிலும் அலசிப் பார்த்து விட்டான். எல்லா வீடியோ லைப்ரரியிலும் விசாரித்து விட்டான். அப்படி ஒரு படத்தின் பெயரைக் கேட்டது கூட இல்லை என்று சத்தியம் செய்தார்கள்.

''நான் என்ன, பட்டுப் புடைவை கேட்டேனா, நகை கேட்டேனா, ஆப்டர் ஆல், ஒரு சினிமாவுக்குக் கூட்டிட்டுப் போங்கன்னுதானே கேட்டேன்'' என்று சமயம் வரும்போதெல்லாம் கண்ணைக் கசக்கியே மற்ற காரியங்களைச் சாமர்த்தியமாகச் சாதித்துக் கொண்டாள் லலிதா.

ஏதோ செய்யக் கூடாத தப்பு செய்து விட்டவன் போல ஐந்து வருடங்களாகக் குமைந்து கொண்டிருந்தான் கணேசன். இன்று எல்லா தெய்வங்களும் மனம் வைத்து அவன்பால் கருணை கொண்டு விட்டன.

**ஞா**யிற்றுக் கிழமை வேலைகளான கிளீனிங், வாஷிங் முதலான 'பெட்டி வொர்க்ஸ்' ஒத்தி வைக்கப்பட்டன. டெய்லி ரொடீன் வேலைகளான குளியல், டிரஸ்ஸிங் முதலானவை மின்னல் வேகத்தில் நடைபெற்றன.

''ஏங்க, சண்டே ஸ்பெஷல்னு அவியல், சிப்ஸ்னு எதையாவது ஆரம்பிக்காதீங்க. சிம்பிளா வத்தக் குழம்பு வெச்சு அப்பளம் பொரிச்சுடறேன்'' என்றாள் லலிதா. கணேசன் பவ்யமாகத் தலையாட்டினான்.

''என் ப்ரெண்ட் பரிமளாவோட குழந்தைக்கு பர்த்டே. மூணு மணிக்குப் போகணும். உங்களுக்கு மத்தியான டிபனுக்கு ப்ரெட் டோஸ்ட் போதுமோலையோ'' என்றாள் அடுத்ததாக.

''எதேஷ்டம்'', என்றான் கணேசன் அடக்கமாக.

இருவரும் சாப்பிட்டு விட்டுக் கையலம்பும் போது காலிங்பெல் சப்தம். வந்தது கணேசனின் மாமாவும், அத்தையும்.

''நீயும் புது வீடு கட்டினதிலிருந்து வா வான்னு கூப்பிட்டிட்டிருக்கே. இன்னைக்குத்தான் டைம் கிடைச்சது'' என்றபடி நுழைந்தனர்.

# சி.எஸ்.சித்ரா

''ஒரே வெயில். அம்மாடி, ஜில் லு னு த ண் ணி குடு. மணி ஒம்பதுதானே ஆறது. எங்களுக்கு ஞாயித்துக் கிழமை மெள்ள சாப்பிட்டுத்தான் பழக்கம். அவியல் பண்ணி, உருளைக் கிழங்கு சிப்ஸ் பண்ணேன். இது ரெண்டும் அட்டகாசமாப் பண்ணறேன்னு உங்க மாமனாரே எங்கிட்டச் சொல்லியிருக்கார்,'' என்றாள் அத்தை.

லலிதாவுக்குப் பச்சை மிளகாயைக் கடித்தாற்போல் இருந்தது. எரிச்சலோடு சென்று சமைக்கத் தொடங்கினாள். மாமா, அத்தையின் லொடலொடப்பிற்குப் பதில் சொல்லி, சாப்பாடு போட்டு அவர்களை அனுப்பும் போது மணி பன்னிரண்டு அடித்தது.

''எனக்குத் தலையை வலிக்குது. கொஞ்ச நேரம் படுத்து ரெஸ்ட் எடுத்துட்டு அப்புறம் பரிமளா வீட்டுக்குக் கிளம்பறேன். ரெண்டு மணிக்கெல்லாம் எழுப்பி விட்டுடுங்கோ,'' என்று அவள் படுக்கவும், காத்திருந்தது போல் கரண்ட் கட்டானது.

''ஐயையோ, சம்மர் சீசன் வந்தா இந்தச் சனியன் வேற. ஏங்க, படம் போடும் போது கரெக்டா கரண்ட் கட் ஆயிடுச்சுன்னா? நீங்க வேணா போய் ஈ.பி. ஆபீஸ்லே சொல்லி வையுங்க!'' என்றாள் லலிதா.

''இன்னைக்கு சண்டே. ஈ.பி. ஆபீஸெல்லாம் மூடியிருக்கும்.''

''அட. என்னங்க நீங்க, போய்த்தான் பாருங்களேன். யாராவது லைன்மேன் அகப்படுவாங்க. அஞ்சு, பத்து தரேன்னு சொல்லிக் கூட்டிட்டு வாங்க.''

கணேசனின் அதிர்ஷ்டம், அவள் சொல்லி வாய் மூடுவதற்குள் கரண்ட் வந்து விட்டது. அத்துடன் அப் பிரச்னை மறக்கப்பட்டது. தூங்கி எழுந்து தெம்புடன் பரிமளாவின் வீட்டிற்குக் கிளம்பினாள் லலிதா.

போகும் போது, ''நீங்க வேணா சீக்கிரமாப் போய் மார்க்கெட்டிலிருந்து கறிகாய் வாங்கிட்டு வந்துடுங்க. படம் ஆரம்பிச்சுட்டா அசைய முடியாது!'' என்றாள் கண்டிஷனாக.

**ல**லிதா திரும்பி வரும்போதே மணி ஐந்தரையாகி விட்டது. பரபரப்புடன் தன்னிடமிருந்த டூப்ளிகேட் சாவியின் உதவியோடு

கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாள். கணேசன் காய்கறி வாங்கப் போயிருந்தான்.

டீவியை ஆன் செய்யப் போன போது காலிங்பெல் வீறிட்டது. எரிச்சலோடு சென்று கதவைத் திறந்தாள் லலிதா. யாரோ ஒரு தாடி வைத்த ஆள் கையில் பெட்டியுடன் நின்றிருந்தான்.

''மிஸ்டர் கணேசன் வீடு இதுதானா?'' என்றான் மெள்ள.

''ஆமாம். இந்த வீடுதான். ஆனா, நீங்க அவரை இப்பப் பார்க்க முடியாது. வெளியே போயிருக்கார். வர ரொம்ப லேட்டாகும். போயிட்டு நாளைக்கு வாங்க'' என்றாள் அதட்டலாக. சொன்ன கையோடு படாரென்று கதவையும் அறைந்து சாத்தினாள்.

'சமயங் காலம் தெரியாம யாராவது வந்து உயிரெடுக்கறாங்க. மார்க்கெட்டுக்குப் போன மனுஷன் கொஞ்சம் சீக்கிரம் வீடு திரும் பினா என்ன!' என்று முணுமுணுத்தவாறே உள்ளே வந்தாள்.

டீவியை ஆன் செய்தாள். ஒரே அலை அலையாய் வந்தது. சவுண்டும் இல்லை. எல்லா அட்ஜஸ்ட்மெண்டையும் செய்து பார்த் தாள். பக்கத்து வீட்டுப் பையனை அழைத்து ஆன்டெனாவையும் சரி பார்க்கச் சொன்னாள். எல்லாம் சரியாகவே இருந்தது. ஆனால், டீவியில் படம் வரவில்லை.

திரும்பவும் காலிங்பெல் வீறிட்ட போது மணி ஆறடித்தது. வெறுப்போடு சென்று கதவைத் திறந்தாள் லலிதா. சகல காய்கறி களுடன் நின்றிருந்தான் கணேசன்.

''என்னங்க டீவி..!!'' என்று அழுகையுடன் ஆரம்பித்த லலிதாவை இடைமறித்து,

''லலிதா நீ போனப்புறம் வொர்ல்ட் ஆப் ஸ்போர்ட்ஸ் பார்க்க லாம்னு டீவியை ஆன் பண்ணினேன். ஒரே அலை அலையா வந்தது. சரிதான், டீவி ரிப்பேர்னு உடனே கிளம்பிட்டேன். சண்டே ஆனதாலே நிறைய கடை லீவு. ஒருவழியா என் ப்ரெண்டோட ப்ரெண்ட் கடை மெக்கானிக்கைக் கெஞ்சிக் கூத்தாடி அனுப்பி வெச்சுட்டுக் காய்கறி வாங்கிட்டு வர்றேன். அந்த தாடி மெக்கானிக் வந்து ரிப்பேர் பண்ணிட்டுப் போயிட்டானா?'' என்றான் மூச்சு விடாமல்.

லலிதா தடாலென்று மயங்கி உட்கார்ந்தாள். டீவியில் இன்னும் அலைஅலையாக வந்து கொண்டிருந்தது!




■ சமீபத்தில் சென்னை வந்துவிட்டுத் திரும்பும்போது செங்கல்பட்டு பேருந்து நிலையம் அருகில் ஒரு ''ஹோட்ட(ல்)லை மறக்க முடியுமா?'' என்று தோன்றியது. காரணம் அதன் பெயரே அதுதான்!

■ புதுக்கோட்டையில் ஒரு ஜவுளிக்கடையின் பெயர் ''வாழைமரத்து ஜவுளிக்கடை''!

■ தஞ்சை மாவட்டத்தில் அய்யம்பேட்டையில் ஒரு கடைக்குப் பெயர் ''தங்கப்பல்காரர் இரும்புக் கடை''யாமே!

கலைத்தது : ''ஆங்கரை ஆனந்''



# பொண்டாட்டி ராஜ்யம்

வேலை விஷயமாய் வெளியூர் போகும் நாயகன் சரவணன் (சாயல் விஜய காந்தை ஞாபகப்படுத்துகிறது.) தனக்கு வாழ்வளித்த நண்பன் லாரி விபத்தில் மரண மடைய, அவன் மனைவியை வயிற்றில் குழந்தையுடன் தங்கையாக ஏற்றுக் கொள்ள வேண்டியதாகி விடுகிறது.

வாழாவெட்டியான அக்காவையும் நாயகி தன் வீட்டிலேயே வைத்துக் கொள் கிறார். அப்புறம் சந்தேகப் புயலுக்குக் கேட்கவா வேண்டும்!

கணவன் வேலை விஷயமாகத் தங்கி யிருக்கும் ஊருக்கே குழந்தையோடும், அக்காவோடும் வரும் ரஞ்சிதா கணவன் மேல் சந்தேகப்பட்டுக் கதையை நகர்த்தி, கிளைமாக்ஸில் தாலியை ஷிந்திக்காரப் பெண்ணின் கழுத்தில் கட்டச் சொல்லிக் கணவனை வற்புறுத்த, ஹீரோவும் தாலி யோடு போக, ஷிந்திக்கார பெண் நாலு அறை விட, அப்பொழுதுதான் அக்காவுக் கும் தங்கைக்கும் சந்தேகப் பேய் விலகு கிறது.

ஷிந்திக்கார பெண்ணாக வருபவர் கண்ணாலேயே நடித்து விடுகிறார்.

''ஒரு நிமிஷம் உள்ளே வாயேன்'' - என்று தங்கையை உள்ளே அழைத்து, துர்போதனை செய்யும் வாழாவெட்டி அக்காளாக நல்லெண்ணெய் சித்ரா. படம் முழுக்க ஆண்பிள்ளைகளைக் காய்ச்சுகிறார்.

அக்காளின் உபதேச மந்திரத்தில் சிக்குண்டு தவிக்கும் தங்கையாக நாடோடித் தென்றல் ரஞ்சிதா. உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரை நடிக்கிறது.

சரவணனின் பாஸாக கௌவியில் வரும், பணக்கார முதலாளி டைரக்டர் சுந்தர்ராஜன் நல்ல நகைச்சுவை நடிகராகப் பரிணமிக் கிறார்.

''அணிலுக்கு மூணு கோடு போட்ட ராமரே'' - பாடலில் கலக்கியிருக்கிறார் இசையமைப்பாளர் தேவா.

இரண்டே கால் மணி நேரம் நம்மை வாய் விட்டுச் சிரிக்க வைத்த டைரக்டர் கே. எஸ். ரவிக்குமார், ஒன்றிரண்டு இடங்களில் வரும் இரட்டையர்த்த வசனங்களைத் தவிர்த்திருக்கலாம்!

- சுப்ராஜா ஸ்ரீதரன்

# முற்றுகை

**8**

ஸ்கூட்டரை நிறுத்தி இறங்குவதற்குள், வீட்டிற்குள் வெளிச்சம் கண்விழித்தது. இரும்புக் கேட்டை இடதுகையால் திறந்து, வண்டியை உள்ளே தள்ளி, வராண்டாவில் ஸ்டாண்ட் போட்டு விட்டு மணியைப் பார்த்தான்.

9:47.

கேட்டைப் பூட்டி விட்டுத் திரும்பினான். ஒற்றைக் கதவைத் திறந்து கொண்டு நின்ற ரத்னத்தைப் பார்க்கவும் ஒரு குற்ற உணர்ச்சி.

''இப்பத்தான் வர்றீங்களா?'' கரத்திலாத வறண்ட குரலில் கேட்டாள்.

''ம்'' என்றான். பார்டரும் டிசைனும் போட்ட சந்தனக் கலர் ஸாரியும், மேட்சிங் ஜாக்கட்டும் அவளது கறுத்த உடம்புக்குப் பாந்தமாய் அமைந்திருந்தன. அவளது கூந்தலில் மொட்டு அவிழ்ந்த மல்லிகையின் வாசனைச் சிரிப்பு.

அவளது புற அலங்காரத்திற்கு முரண்பாடாக, வாட்டமடைந்த முகம். புண்பட்டுப் போன உணர்வுகளை மறைக்க யத்தனிக்கிற அவஸ்தை.

இவனுள் முள்ளாக உறுத்துகிற குற்ற உணர்வு. குரலில் குழைந்தான்.

''ரத்னம், இன்னும் சாப்பிட்டிருக்க மாட்டே? இல்லே?''

''பரவால்லேங்க.''

அவன் கழற்றித் தந்த சட்டையை வாங்கிக் கொண்டாள். சமாதானம் சொல்கிற பாவனையில் கயபச்சாதாபத்துடன் சொன்னான்.

''இல்லேம்மா. நம்ம பொழைப்பே இப்படியாகிப் போச்சு. அடையுறதுக்குக் கூடு கிடைக்காத பறவையா அலையுறதே... தொழிலாகிப் போச்சு. இங்க பாரு. இன்னிக்கு உ.பி.க்கு ஒரு லோடு அனுப்பியாகணும். அர்ஜெண்டு. டிரைவரு வர லேட்டாயிடுச்சு. அவனைப் பார்த்துப் பிடிச்சு இழுத்து, டயத்துலே அனுப்பி வைக்கலேன்னா... கிடைச்ச ஆர்டர் கேன்சலாயிரும். தொழில் கெட்டுப் போகும்.''

''..........''

''தொழிலுக்கு நல்ல புள்ளையானா... வீட்டுக்குக் கெட்ட புள்ளையாக வேண்டியிருக்கு. வீட்டுக்கு நல்ல புள்ளையாயிட்டா... தொழில் நம்மளை ஏமாத்திரும்.''

இவனது சமாதானத்திற்குப் பிறகும் அவள் மௌனம் நீடிக்கிறது. அது, இவனுள் ஒரு வேதனையாக உட்கார்கிறது.

அவளை நம்ப வைத்து - காத்திருக்க வைத்து - ஏங்கச் செய்து - அவளது பெண்மை உணர்வையே அவமதித்து விட்டதாக அவன் உணர்கிறான். வருந்துகிறான்.

அவளது குறைந்தபட்சமான கனவுகளைக் கூட காயப்படுத்தி விட்டேனோ...?

''ரத்னம்...''

''ம்.''

''வண்டியிலே பக்கடா வச்சிருக்கேன். ஒனக்குப் பிடிக்கும்னு வாங்கிட்டு வந்தேன். எடுத்துட்டு வாரியா?''

''பக்கடா மட்டுந்தானா?''

''அல்வா இல்லாமல் பக்கடாவா? நம்ம வாடிக்கை மறந்துருமா?''

அவள் வராண்டாவுக்கு விரைகையில், ஒரு மாற்றம் முகம் காட்டியது. வருத்தம் நீங்கி, முகத்தில் உயிர்ப்பு ஒளி மொட்டு விரியத் தொடங்கியிருந்தது.

அவள் நடையில் ஒரு சிறிய துள்ளல். முகத்தில் மலர்ச்சியின் சின்ன நகை. கண்களின் இமைத் துடிப்பில் அந்த உயிர்ப்பின் வாசம்.

''வாங்க... சாப்டுங்க.''

''ரத்னம், ஒடம்பை லேசா அலசிக்கிடுறேன். ஒரே புழுக்கம், நசநசப்பு.''

''வெண்ணி ஆறிப் போயிருக்குமே!''

''பரவாலே. இருக்கட்டும்.''

குளித்து முடித்து டவல் அணிந்து வெளியே வர, கைலியுடன் அவள் நின்றாள்.

அட, நிஜமாகவே அழகாகத் தோன்றுகிறாள்.

அவள் கைலியை நீட்ட, அதை வாங்கிய ஈரக்கையோடு அவள் கையை எட்டிப் பற்றினான். கையை உருவிக் கொள்ள மனசில்லாமல் முயன்றாள்.

''ச்சீய்... என்னங்க இது?''

''இதுவா? ரத்னத்தோட கை.''

சட்டென்று கண்டி இழுத்தான். அலம்பலாய், தடுமாறிப் போய் மார்பில் வந்து விழுந்தவளை அழுத்தமாய் அணைத்து... இறுக்கி -

''ச்சீ... போங்க. என்னை விடுங்க'' என்று சிணுங்கிய உதடுகளை அசைய விடாமல், அழுத்தமாய் முத்தமிட....

திமிறிக் கொண்டு தப்பித்து ஓடினாள்.

அவனுக்குள் பொங்கிப் பிரவகித்து, அவனை அடித்துச் செல்கிற இன்ப நதி. உடம்பின் ஒவ்வொரு மெல்லிய துடிப்பிலும் அது கசிகிறது.

கைலியை உடுத்திக் கொண்டான். அருந்களைக் குள்ளும் முறுக்கிக் கொண்ட தேக நிலை. நிஜமாகவே ஒரு பரவச நிலை.

ஒரு பெண்ணை வெற்றி கொள்கிற ஆண்மைப் பரவசம். ஒரு பெண்ணின் கட்டாயத் தேவையாக - வேர் பதித்துப் படர்கிற மண்ணாக - இருக்கிறோம் என்கிற பரவசம். தனது இருப்பின் அர்த்தத்தை உணர்ந்த பரவச நிலை.

பனியனைக் கூட போட்டுக் கொள்ளவில்லை. தலையைச் சீவிக் கொண்டான். பவுடரைத் தட்டி மார்பிலும், கழுத்திலும் பரவலாய்த் தடவிக் கொண்டான். லேசாக முகத்திற்கும்...

கண்ணாடியில் தன்னைப் பார்த்தான். கறுப்பு ரோமங்கள் அடர்ந்த தேன் நிறத் தேகம்.

நடு ஹாலுக்குள் வந்தான். அவனிடம் ஒரு இன்பப் பெருமிதம். குறும்பான சிரிப்பு உதட்டில்.

அந்த இளங்குறும்பைப் பார்ப்பதைத் தவிர்த்தாள், ரத்னம். லஜ்ஜையில் நடுங்குகிற மனசு. அவள் கண்களின் ஆழத்தில் நாணத்தின் ஒளித் தெறிப்பு.

''சாப்பிடுங்க, வாங்க.''

''அப்புறம் பாக்கலாம். மொதல்லே அல்வா பக்கடாவை எடு.''

''டயத்தைப் பாருங்க. பத்தாகுதுங்க.''

''தெரியுதுங்க. நீங்க, நா சொல்றதைச் செய்யுங்க.''

பொய்க் கோபத்தில் முகத்தை ஒரு வெட்டு வெட்டினாள்.

அல்வாவைப் பிய்த்து உண்டான். அவளால் உண்ண முடியவில்லை. உண்ணும் நிலையில் மனசு இல்லை. ஒரு பரவசத் தவிப்பு. வேரறுந்த, காற்றில் அலை பாய்ந்து மிதக்கிற ஒரு பூங்கொடியாக... மனசு.

''சாப்பிடுங்க ராணியம்மா.''

''வேண்டாங்க.''

''இந்தா, இந்தத் துண்டை மட்டும் வாயிலே போட்டுக்க.''

''வேணாங்க. போதும்.''

''நீயா எடுத்துக்கலேன்னா... நானே எடுத்து வாயிலே ஊட்டி விடுவேன்.'' சிரித்துக் கொண்டே அவன் மிரட்டவும், அவளும் பயத்தோடு சிரித்துக் கொண்டே எடுத்துக் கொண்டாள்.





கையைக் கழுவித் துடைத்துக் கொண்டவர்.

''அப்படியே கொஞ்சம் சாதத்தை உள்ளே போட்டுக்கங்க.''

''இப்ப வேண்டாம்.''

''சொன்னா கேளுங்க'' வற்புறுத்துவதற்காகத் தொட்ட அவளது கையைப் பற்றி அழுத்தி, நெருக்கமாய் இழுத்துக் கொண்டான்.

கூந்தலின் பூங்கொத்தில் முகம் புதைத்தான். மல்லிகையின் வாசத்தை உள் இழுத்தான். பூதங்களை உசுப்பி விடுகிற லாகிரி வாசனை.

அவளது மெல்லிய சிணுங்கலும் மறுப்பும் கூட மனசுக்குச் சுகமாகவே இருக்கிறது.

பெண்மையின் சாகசமும் ஒரு இரக்கம்தானா? இன்னும் கனியின் ருசியை அதிகமாக்குகிற ஆச்சர்யம்தானா?

அவளை அணைத்துக் கொண்டே படுக்கையறைக்குள் நகர்ந்தான். அவள் இன்னும் மெல்லத் திமிறுகிறாள். கையைத் தட்டி விடுகிறாள்.

விடிவிளக்கின் மங்கலான வெளிச்சத்தில் அவளது பிம்பம். அழகாகவே தோன்றுகிறாள்.

மனசில் பொங்கியெழுகிற தாபப் பேரலைகள். உணர்ச்சிக் கொதிப்பில் உக்ரமாகிற மனசு.

பிரம்மாண்டமான கவண்வில்லிலிருந்து விசிறியெறியப்பட்டு, 'விர்ர்' றென்று இரைச்சலோடு வந்து மோதுகிற மாயப் பிசாசுகள். மோதியடித்து வீழ்த்திக் கெக்கெலிக்கிற பூதங்கள்.

போர்க்களக் குதிரைகள். கால்களை உயர்த்தி, பயங்கரமாய்க் கனைக்கிற குதிரைகள். தேகத்தின் சகல அணுக்களும் ஆயிரம் ஆயிரம் குதிரைகளாகி... புழுதியைக் கிளப்பிக் கொண்டு சீறிச் சினந்து பாய்கிற குதிரைகளாகி...

ஈட்டிகளின் மின்னல் உராய்வுகள். கவசங்களோடு மோதிச் சப்திக்கிற ஆயுதங்கள். யானைப் படைகளின் பிளிறல்கள்.

என்ன ஆயிற்று? சேனாதிபதி கைதாகி விட்டாரா? ராஜாவின் மார்பிலேயே ஈட்டி செருகிக் கொண்டதா? செத்து விட்டாரா? திகைத்துக் குழம்புகிற படைகள். பாய்ச்சலின் வேகம் சிதறிய திகைப்பு. தேக்கம். ஏதோ... உள்சிதைவு.

இது... விருதாவான போர்க்களமோ? விளைவு எதுவும் இல்லாததோ? மழலையை உயிர்ப்பிக்க இயலாத வெற்று ஆரவாரமோ?

அருந்தகனை தளர்ந்தான். உள் உடைவுகளோடு களைத்துப் போய்ச் சரிந்தான். பாதிச் சவமாகி விட்ட அவன் தேகமெல்லாம் வியர்வைக் கோடுகள்.

இன்பமில்லை. பரவசம் இல்லை. கிறங்கடிக்கிற சுகமில்லை. அழுத்தி வதைக்கிற சலிப்புணர்ச்சிதான் மிச்சம். மனசைப் பிய்த்துப் பிடுங்குகிற சலிப்புணர்ச்சி. உள் உணர்வுகளையெல்லாம் கொத்திப் பிடுங்குகிற கசப்புணர்ச்சி. வெறுமையான ஆயாசம்.

எதையும் பார்க்க விரும்பாமல், வெறுப்புடன் கண்களை மூடிக் கொண்டான்.

ரத்னம் என்ன ஆனாள்? நிராசைத் தீயில் துடிக்கிறாளா? வேதனைக் கசிவு அவள் கண்களில் தெரிகிறதா? கசந்து போய் அழுகிறாளா? கவனிக்க விருப்பமில்லை. வெறுப்பு. பயம்.

அவள் எக்கேடும் கெட்டுத் தொலையட்டும். நாசமாய்ப் போகட்டும். இந்த






வெறும் கட்டையைக் கட்டிக் கொண்டு எத்தனை காலத்துக்கு வியர்வையும் கண்ணீருமாய் அழுவது? பொட்டுச் சவியல். புல் கூட முளைக்காத உவர்நிலம். வெறும் மண்.

இரக்கப்பட்டு பிச்சை போடுகிற விஷயமா, இது? அசலான கொடுக்கலும் அசலான வாங்கலுமாய் இருக்க வேண்டிய தாம்பத்யம், ஒருவழிப் பாதையாய்க் குறுகிப் போய் இறுகிக் கிடப்பதை எத்தனை காலம்தான் சகித்துக் கொள்வது?

கணிதம் தோற்றுப் போக வேண்டிய புனிதமான இடமல்லவா, தாம்பத்யம்! ஒன்றும் ஒன்றும் இரண்டல்ல. ஒன்றுடன் ஒன்று சேர்ந்தால், ஒன்றாகவும் மூன்றாகவும் முரண்பட வேண்டிய முடிச்சல்லவா, இனிய தாம்பத்யம்! இரண்டு என்கிற வறண்ட கணிதச் சூத்திரத்தை எத்தனை காலம்தான் பொறுத்துக் கொள்வது?

பக்கத்தில், ஓர் உருவம் மெள்ளப் புரள்கிறது. அவளும் வாழ்க்கையை ஒரு சாபமாக உணர்கிறாளா? ஆயுள் தண்டனையை அவஸ்தையுடன் அனுபவிக்கிற பக்குவத்தை வரவழைத்துக் கொள்கிறாளா?

உள்ளுக்குள் நமைச்சல் எடுக்கிற நினைவுகள். மனசின் மூலை முடுக்கெல்லாம் கடித்துக் குதறுகிற நமைச்சல்.

களைப்பின் அயர்ச்சியில் இன்பத் தென்றலாய் வந்து தழுவ வேண்டிய தூக்க தேவதையை, கிட்டத்தில் அண்ட விடாமல், அடித்து விரட்டுகிற நமைச்சல்.

உறங்கவும் முடியாமல் - மனசின் இறுக்கத்தைப் பேசிப் பகிர்ந்து உடைக்கவும் முடியாமல்... புழுக்கத்தில் உழன்றான். கனமை தாளாமல் தவித்தான். மூச்சுத் திணறியது.

நமைச்சலிலிருந்து மனசை வலுக்கட்டாயமாய்ப் பிய்த்து விடுதலைப்படுத்தினால்... வேறு நினைவுகளை நினைத்தால்...

மனசில் வந்து நின்றாள், சொர்ணம். அந்திச் சூரியனின் குளிர்ப் பிரகாசமாய்ப் பரவுகிற சொர்ணம். தங்க மின்னலாய், தகதகப்பாய்ச் சுடர்கிற சொர்ணம்.

கைக்குள் அடக்கமாய் - சின்ன உருவமாய் - வாசத்தை உள்ளடக்கிய மல்லிகை மொட்டாய் - சொர்ணம்.

மனசின் சகல மூலை முடுக்கெல்லாம் நீக்கமற நிறைகிற சொர்ணம். பாலைவன மனிதன் கண்ணில் பட்ட நீர்க்கனையாய்... சொர்ணம். அருவியாகப் பாய்ந்து அள்ளிக் கொள்கிற சொர்ணம்.

கற்பனையின் தாலாட்டுப் பாட்டில் மனசு லயித்து லயித்து, கிறங்கிச் சரிகிறது. இதுதான் உறக்கம் என்பதா?

(தொடரும்)



# பாரதி வழிபட்ட பார்த்தசாரதி

## திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி திருக்கோயிலின் மஹாசம்ப்ரோக்ஷணம் சமீபத்தில் சிறப்பாக நடைபெற்றது. இத் திருத்தலம் பற்றிச் சில சுவையான தகவல்கள் :

- இக் கோயிலின் உற்சவ மூர்த்தி தான் பார்த்தசாரதி. மூலவர் கிருஷ்ண பரமாத்மாவே. சுமதி என்ற அரசன் வேங்கடவனிடம் அளவற்ற பக்தி பூண்டவன். அவனுடைய தவத்துக்கு இறங்கியே வேங்கடமுடையான், பிருந்தாரண்ய க்ஷேத்திரத்தில் கண்ணபிரானாகக் காட்சி தந்ததாகப் புராண வரலாறு. திருவல்லிக்கேணி என இன்று வழங்கும் அத்தலத்தின் மூலவருக்கு வேங்கடகிருஷ்ணன் என்றே திருநாமம்.

- கி.பி. எட்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாகக் கருதப்படும் இக் கோயில் ஒரு காலத்தில் கடலலைகள் வந்து மோதும்படியாக அமைந்திருந்தது. 'வந்துதைத்த வெண்திரைகள் திருவல்லிக்கேணியான்' - இது பேயாழ்வார் பாடியது. பிற்காலத்தில், கடல் கொண்டு விடாமல் பாதுகாக்கவே கோயிலை மாற்றி அமைத்தார்களாம்.

- ஸ்ரீ ராமானுஜரின் தகப்பனார் ஆசூரி கேசவாச்சாரியார் இத்தலத்தில் யாகம் செய்தே பிள்ளை வரம் கிடைக்கப் பெற்றார். எம்பெருமானே ராமானுஜர் வடிவில் இவருக்குப் புத்திரனாக அவதரித்தார் என்பது புராணம்.

- தியாகராஜ ஸ்வாமி இத் தலத்துக்கு விஜயம் செய்து பற்பல கீர்த்தனைகளைப் பார்த்தசாரதி பெருமான் பெயரில் இயற்றியுள்ளார்.

- உலகச் சமயக் கருத்தரங்கில் கலந்து கொள்ள அமெரிக்கா சென்ற விவேகானந்தர், புறப்படும் முன்னர் இக்கோயிலில் வந்து வழிபட்டுவிட்டுச் சென்றார்.

- மகாகவி பாரதியார் திருவல்லிக்கேணியில் வசித்தார் என்பது தெரியும். அவர் தினந்தோறும் பெருமாளை வழிபட்டு வந்தார். இத்தலத்தில் எழுந்தருளியுள்ள கண்ணனை மனத்தில் கொண்டே அவர் கண்ணன் பாடல்களையும் பாஞ்சாலி சபதத்தையும் இயற்றியதாக அவரோடு நெருங்கிப் பழகியவர்கள் கூறுகிறார்கள்.

- தீரர் சத்தியமூர்த்தி, கணித மேதை ராமானுஜம் போன்றவர்களும் திருவல்லிக்கேணியில் வாழ்ந்து வழிபட்டுள்ளனர்.

- சமீபத்தில் நடந்து முடிந்த திருப்பணிகளுக்குச் சுமார் 25 லட்சம் ரூபாய் செலவாயிற்று : விமானத்தில் உள்ள கலசங்களைத் தங்க முலாம் பூசிப் புதுப்பிக்க மட்டுமே ஐந்து லட்சம்; புதிய துவஜஸ்தம்பம் நிறுவ ஒன்றரை லட்சம்....

- ஆழ்வார் பாசுரங்களில் இத்தலம் மயிலை திருவல்லிக்கேணி என்றே குறிப்பிடப்படுகிறது. 'ஒப்பவரில்லா மாதர்கள் வாழும் மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி.....' என்பது திருமங்கையாழ்வார் பாடல் வரி. (மஹிலா - பெண்) ஒப்பற்ற பெண்கள் வாழ்ந்த ஊர் 'மஹிலா புரி' என்று அழைக்கப்பட்டது. அதுவே மயிலாப்பூர் ஆகியது என்பர்....

– டாக்டர் எம்.ஏ. வேங்கடகிருஷ்ணன்

திருவேங்கடமுடையான் திருக்கோலத்தில் ஸ்ரீ பார்த்தசாரதி
வண்ணப்படம் : எம்.ஏ.எஸ்.

# 'ஜெ' அரசுக்கு ஆபத்து எந்தப் பக்கத்திலிருந்து?



● ஆபத்து!

● பூர்ணிமா, வேலூர்.

*? அலை ஓசையை ஒரு வாரப் பத்திரிகையின் கேள்வி பதில் பகுதி "கல்கியின் சவலைக் குழந்தை" என்று வர்ணித்திருப்பது பற்றி...?*

! அபிப்பிராயம் கூற எல்லாருக்கும் உரிமை உண்டு. ஆனால் சவலைக் கருத்துக்கள் நிலைப்பதில்லை. அலைகடல் உள்ளளவும் 'அலை ஓசை' வாசகர்கள் மனம் கவரும் என்பதற்கு ஏற்கெனவே அது அடைந்துள்ள வெற்றிகளே சான்று.

● தென்றல் கார்த்தி, நாட்டரசன் கோட்டை.

*? "நான் இ. காங்கிரஸை விட்டு விலகினால் தமிழ்நாடு காங்கிரஸ் வலிமை பெறும் என்று மேலிடம் கருதினால் நான் கட்சியை விட்டு விலகத் தயார்" என்று மூப்பனார் ஆவேசமாகக் கூறியுள்ளாரே!*

! மேலிடம் என்ன கருதுகிறது என்பதை விட அடித்தளம் என்ன நினைக்கிறது என்பதே முக்கியம். இதற்கு உட்கட்சி ஜனநாயகமும் தேர்தலுமே பதில் கூற முடியும்.

● கே. பட்டு, கும்பகோணம்.

*? ஜெ. அரசுக்கு ஆபத்து எந்தப் பக்கத்திலிருந்து?*

! போயஸ் தோட்டத்திலிருந்து.

● ஆ. ஜீவா, பூண்டிதீர்த்தேக்கம்.

*? கல்கியின் அரவணைப்பில் வாசகர்களாகிய நாங்களும் குழந்தைகள்தானே! எங்களை மட்டும் 64 பக்கம் போட்டு ஏங்க வைப்பது நியாயமா?*

! உங்களைப் போன்ற குழந்தைகளின் அரவணைப்பில் கல்கி தாய்தானே! அது நஷ்டமடைவதை நீங்கள் அனுமதிக்கலாமா? கோகுலம் நஷ்டமடைந்தால் கல்கி, மங்கையர் மலர் தாங்கும். எல்லாமே நஷ்டமடைந்தால் யார் தாங்குவது? 'குழந்தைக் குலத்துக்கு நல்லது நினைக்கிறோம்' என்றால் குதர்க்கமாகக் கேள்வி கேட்கிறீர்களே!

● தெ. சு. திலீபன், வத்திராயிருப்பு.

*? "என்னை எம்.பி.யாக எம்.ஜி.ஆர். இருக்கச் சொன்னார்" என்று நடிகை சரோஜாதேவி தொலைக்காட்சி பேட்டியில் கூறியுள்ளாரே?*

! அதை ஏற்றுக் கொள்ளாத சரோஜா தேவியைப் பாராட்டத்தான் வேண்டும்.

● சித்ரா கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம்.

*? மெழுகுவர்த்தியாக இருக்கும் அரசியல்வாதி ஒருவரை அடையாளம் காட்ட முடியுமா?*

! ஒருவரென்ன, நிறையவே உண்டு. எல்லாக் கட்சிகளிலும் அடிமட்டத் தொண்டர்கள் எப்போதும் மெழுகுவர்த்திகள்தான்!

● என். ஆர். சுப்பிரமணியன், பூனாம் பாளையம்.

*? மூப்பனார் கோஷ்டியை "அனாதை காங்கிரஸ்" என்று அரங்கநாயகம் வர்ணித்துள்ளாரே?*

! ஒருவகையில் சரிதான். தமிழகத்தில் காங்கிரஸ் அநாதையாகி விட்டதை உணர்ந்து அரவணைத்து அதற்கு மரியாதை பெற்றுத் தர முயலும் கோஷ்டி.

● இரணியல் கலை, இரணியல்.

*? உலகம் முழுவதையும் கட்டி ஆண்ட இங்கிலாந்து அரச குடும்பத்தில் இன்றைய ராணியின் மருமகள்கள் விவகாரம் சந்தி சிரிப்பதைப் பார்த்தீர்களா? இந் நிலைக்கு காரணம் என்ன?*

! அரச குடும்பமென்ன அன்றாடங்காய்ச்சிகள் என்ன? இம்மாதிரி விஷயங்கள் பல குடும்பங்களிலும் நடக்கத்தான் செய்கின்றன. முன் காலத்தில் அரச குடும்பத்தில் நடக்கும் சில காரியங்கள் பயம் அல்லது மரியாதை, விசுவாசம் காரணமாக வெளியே வராமலிருந்தன. மக்கள் ஆட்சியில் பத்தி



● ஆவேசம்!



● பாராட்டு!



● சறுக்கல்!

ரிகை சுதந்திரம் அதிகரிக்க அதிகரிக்க குளிர் விட்டுப் போய் அவை உண்மைகளைப் பகிரங்கப்படுத்தி சந்தி சிரிக்க வைக்கின்றன. பத்திரிகைகளின் வியாபாரப் போக்கு இதற்கு மேலும் ஊக்கமளிக்கிறது. சரித்திர ஏடுகளை மேலோட்டமாயின்றி, கருத்தூன்றிப் படித்தால் மன்னர்களும் அரசிகளும் திசை தப்பிப் போவது அப்படியொன்றும் புதிய விஷயமல்ல என்று தெரிய வரும்.

● கே. எம். ஜான்முஹம்மது, இளையான்குடி.

*? "நல்ல வழியில் விளம்பரம் கிடைக்காவிட்டால் தப்பான வழியில் விளம்பரம் தேடும் விளம்பர வெறியர் சுப்பிரமணியம் சுவாமி" என்று ஜெ கூறியுள்ளாரே?*

! ஒரு விரல் சு. சுவாமியைச் சுட்டும் போது ஜெயின் மூன்று விரல்கள் அவரையே சுட்டிக்காட்டுகின்றனவே!

● கே. முருகன், திருவெண்ணெய் நல்லூர்.

*? போஃபர்ஸ் வழக்கில் புதிய திருப்பம் ஏற்பட்டுள்ளதே?*

! வழக்கை நடத்த வேண்டியது அரசு. அது உண்மைகள் வெளிவர வேண்டாம் என்ற எண்ணத்தோடேயே வழக்கு நடத்தினால் எப்படி வெற்றி பெற முடியும்? வின் சதாவும் லஞ்சம் வாங்கி ஸ்விஸ் வங்கியில் கணக்கு வைத்திருப்பவர்களும் தப்பிக்கத்தான் வழிவகுக்கும். முன்பு ஒருமுறை உச்சநீதிமன்றம் சத்தியத்துக்குத் துணைநின்றது போல் இப்போது மீண்டும் செயல்பட்டிருக்கிறது. உயர்நீதிமன்ற தீர்ப்புக்குத் தாற்காலிகத் தடை விதித்துள்ளது. ஆனால் அரசு உண்மைகளை மூடி மறைப்பது என்று தீர்மானித்து விட்டால் உச்சநீதி மன்றம்தான் என்ன செய்ய முடியும்?

● கே. எம். ரவிச்சந்திரன், மதுரை.

*? ஒரு அரசியல்வாதிக்கு அரசியல் எப்போது மைனஸாகிறது?*

! அதிகார போதை தலைக்கேறும் போது. ஜாகர்தா சென்ற பிரதமர், தமக்கென்று உள்ள விமானத்தை ஒதுக்கி, இரண்டு ஏர் இந்தியா விமானங்களை இப் பயணத்துக்கென்று சுவீகரித்துக் கொள்ள, ஏர் இந்தியா பயணிகள் தவித்துப் போனதைப் பற்றி அறியும் போது, "என்ன ராவ்ஜி, நீங்களுமா?" என்றுதான் கேட்கத் தோன்றுகிறது.

● இராஜ்யவர்த்தனன், சென்னை - 84. ❑

*? திறமை இருந்தும் சந்தர்ப்பம் கிடைக்காத கலைஞன், சந்தர்ப்பம் இருந்தும் திறமையைக் காட்டாத கலைஞன்... குறித்துச் சில வரிகள்?*

! இரண்டுக்குமே எடுத்துக்காட்டு ராஜீவ். சோனியா வெளியிட்டுள்ள சமீபத்திய நூலைப் பார்த்த போது, 'அடேயப்பா! எப்படிப்பட்ட மாபெரும் புகைப்படக் கலைஞன் இந்த ராஜீவ்!' என்ற எண்ணம் ஏற்பட்டது. புகைப்படக் கலைஞராக விளங்க சந்தர்ப்பம் கிடைக்கவில்லை அவருக்கு. ஆனால் பிரதமராகச் சந்தர்ப்பம் கிடைத்தது. அந்த அரசியல் கலையிலோ அவர் ஆரம்பத்தில் காட்டிய திறமை போகப் போகத் தேய்ந்து தேய்ந்து...



● "நீங்களுமா?"



● சந்தி சிரிப்பு!

● எம். யாதவன், திருச்சி.

*? இந்த ஆண்டின் மிகப் பெரிய ஜோக் ஒன்று?*

! ஆண் - பெண் பேதமின்றி ஒருவரை ஒருவர் எதிர்த்து டென்னிஸ் ஆடுவது என்று தீர்மானித்த பிறகு, நவ்ரதிலோவா தாம் பெண் என்பதால் சில சலுகைகளைக் கோரியிருப்பது பெரிய ஜோக்தான். செப்டம்பர் 25ல் கானர்ஸ் ஜெயித்தால் "சலுகை கொடுத்தும் ஜெயித்தேன்" என்று மார்தட்டலாம். தோற்றாலோ, "சலுகை தந்ததால் தோற்றேன்" என்று சமாதானம் கூறலாம். எனவே சலுகை கேளாமலே நவரதிலோவா ஆடச் சம்மதித்திருக்கலாமே? இப்போ அவர் வென்றாலும் கூட "சலுகை பெற்றதால் வென்றார்" என்ற சொல்தானே நிலைக்கும்!



● கலைஞன்



● வர்ணனை!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
ராஜ்யவர்த்தனன்,
47, வெள்ளாள தெரு,
புரசைவாக்கம்,
சென்னை - 600 084.

# இனி ஒரு சதி

8

கதை: பத்மா ரவிசங்கர்

படம்:
















வக்கீலிடமிருந்து திரும்பிய பிறகு, ஆராவமுதன்...
இப்ப புரியுது ஸார், சொத்து தனக்கு வர லியென்னு யுவராஜ் ஆத்திரப்பட்டு...
வெயிட்! ரெண்டு வருஷம் முன்னே எழுதிய உயிலுக்கு...


... யுவராஜ் இப்ப ஏன் ஆத்திரப்படணும்..? ஒரு வேளை சொத்து தன் கைக்குச் சீக்கிரம் வந்து சேர விஸ்வமே...
மண்டை காயுது ஸார்!


ஃபோன் ஒலிக்க...
ஐ ஸீ.. ஓ.கே!
சிடி கிரைம்ல நல்லாவே தோண்டியிருக் காங்க. பட்லர் பேக்கிரவுண்டு ஸ்ட்ராங். இருபது வருஷ விசுவாச வேலை. முன்பகை ஏதுமில்லை...


..அர்ச்சனா ஒரு ரிடயர்ட் மாஜிஸ்ட் ரேட் மக. பர்ஃபெக்ட் பாஸ்ட் ரிகார்ட்..
அப்ப யுவராஜ், விஸ்வம் பேர்லதான் சந்தேகம் வலுக்குது.. எதையோ கவனிக்கத் தவறிட்டோம்.. எதை?


ஃபோன் அலற...
இஸிட்! மை காட்!
ஸார்! சந்திரசேகரை யாரோ கொலை செய்துட்டாங்களாம்!
வாட்!
தொடரும்.

போங்க ஸார்; பெரிய பேட்டி!

நம்புகிறோம்; நிதியமைச்சரை நம்புகிறோம்

◆ 'மண் பாடம்' சிறுகதை மிக நுட்பமான விஷயத்தை நேர்த்தியாகச் சுட்டிக்காட்டியது. "உடல் முழுவதும் மணல் குறுகுறு வென்றது" என்ற வாக்கியத்தில் ஆசிரியர் குறுகுறுத்தது மனமும்தான் என்பதைப் புரியவைக்கிறார்.
திருவாரூர் - 1, எஸ். ராமநாதன்.

◆ 'புதிய உறவுகள்' சிறுகதையில் வரும் மீனா தொட்டது அவள் கணவன் மனத்தை. கதாசிரியர் கமலா கந்தசாமி தொட்டது எங்கள் மனத்தை!
முத்துப்பேட்டை,
தஞ்சைத் தரணியன்.

◆ இளம் உள்ளத்தில் நேர்மையான கருத்துக்களை எப்படி புகுத்த வேண்டும் என்பதை அழகாக உணர்த்திவிட்டார் உமா கல்யாணி. (திருத்தம் சிறுகதை).
நாகமலை, மூ. குருப்பிரசாத்.

◆ டூன் ஸ்கூல் பற்றிக் காற்றுவாக்கில் மட்டுமே கேள்விப்பட்டிருந்த அநேகருக்கு, அப்பள்ளியின் சரிதையோடு, சிறப்புக்களையும் எடுத்துச் சொன்னீர்கள்.
கும்பகோணம்,
சித்ரா கிருஷ்ணமூர்த்தி.

◆ வாரா வாரம் ஆவல் சதவிகிதத்தை உயர்த்திக் கொண்டே விறு நடை போடுகிறது மேலாண்மை பொன்னுச்சாமியின் 'முற்றுகை' தொடர்.
மதுரை - 1, பிரபாகர் ப்ரியன்.

◆ நமது நாட்டின் நிதியமைச்சர் அளித்த பேட்டியைப் படித்தேன்! விவசாய இடுபொருள்களுக்கு மான்யம் தந்தால் நாடு திவாலாகிவிடும் என்று சொன்ன புண்ணியவான்தானே இவர்? போங்க ஸார்! பெரிய பேட்டி.....!
மேல்பட்டி, எல். மாறன்.

◆ நிதியமைச்சரின் பேட்டி கண்டேன். ஒரு சராசரி இந்தியனின் மனநிலையை உணர்ந்து அவர் செயல்படுவது, பாராட்டுக்குரியதே. நமது நாட்டின் 40 ஆண்டுக் கால பொருளாதாரத்தைச் சீராக்க, அவருக்கு இன்னும் கால அவகாசம் தர வேண்டும். உலக அரங்கில் நம்மைத் தலை எடுக்கச் செய்வார், இந்த ஹார்வர்டு பல்கலைக் கழக மாணவர் என்று நாங்கள் முழுவதுமாக நம்புகிறோம். நிதியமைச்சர் சாதிப்பார், நிச்சயம் சாதிப்பார்!
பட்டுக்கோட்டை, இ. சுரேஷ் பாபு.

◆ "கல்கி" 6.9.92 இதழில் போலீஸ் துணை ஆணையாளர் பேட்டியைப் படித்தேன். பாதசாரிகளால் சாலை விபத்து அதிகம் என்கிறார். பாதசாரிகள் நடக்க சென்னையில் சாலைகளின் ஓரங்களில் நடைபாதைகளைச் சரிவரப் பராமரிக்கவில்லை; இருக்கும் சிறிய நடைபாதைகளிலும் வியாபாரிகள் ஆக்கிரமிப்பு; இந்த நிலையில் பாதசாரிகள் என்னதான் செய்ய இயலும்?
சென்னை - 4, டி.எம். சுந்தரராமன்.

◆ சாலைகளில் செல்பவர் எல்லோரும் போக்குவரத்து விதிகளை மீறினால், அவர்களைக் கண்டிக்க, அதற்கேற்ற அளவில் போலீஸ் கிடையாது. அதனால் மக்கள் சுயமாகவே விதிகளை அனுசரிக்க வேண்டும் என்று கே.வி.எஸ். மூர்த்தி பதில் கூறியிருப்பது ஏற்றுக் கொள்ளக் கூடியதல்ல.

தவறு செய்தால் தண்டனை நிச்சயமாக உண்டு, கடுமையாக உண்டு என்ற நிலை இருந்தால் தவறுகள் குறையும்; இல்லாமலே போகும். தவறு செய்பவர்களைப் பிடிப்பதே மாமூலுக்காக என்ற நிலையில் இது நடக்குமா என்ன?
சென்னை - 10, அவைநாயகன்.

◆ பொது வாழ்வை மாசுபடுத்தி வரும் 'ஆபாச அரசியல்' பற்றிய தலையங்கம் அருமை! ஆசிரியர் கூறியுள்ளது போல் இந்திய அரசியலில் படிந்திருக்கும் இந்தக் களங்கத்தைத் துடைக்க, தூய சிந்தனை கொண்ட அறிஞர்களும், ஆன்றோர்களும் முன்வர வேண்டும். இப்படி பொது வாழ்வில் 'தூய்மைப் புரட்சி'யை ஏற்படுத்த பாடுபட்ட இந்த புண்ணியவான்களின் புகழ் இந்தப் பூதலம் உள்ளவரை போற்றப்படும் என்பது நிச்சயம்.
திண்டுக்கல் - 1, எப்போதும் வென்றான்.

◆ ஆபாச அரசியல், மக்கள் மீது பாச அரசியலாக மாற வழி சொல்லியிருந்தீர்கள். பாச அரசியலாவது - இந்த நூற்றாண்டில் இந்தியாவில் தோன்றுவதாவது! போங்க சார்! ஜோக் எழுத உங்களுக்குத் தலையங்கம் பக்கம்தானா கிடைத்தது!
பம்பாய் - 71, செம்பூர்சந்துரு.



## வாழ்வது மதுரையாக இருந்தாலும் வாழ்க்கை நடத்துவது சிதம்பரமாகத்தான் இருக்க வேண்டும் என்பதில் உறுதியாகத்தான் இருந்தேன். ஆனால், வாழ்க்கை நடத்துவதும் மதுரையாகத்தான் ஆகிவிட்டது.

மத்திய அரசுத் துறையில் வேலை. நடுத்தர வாழ்க்கை. அனாவசியச் செலவுகள் எதுவும் கிடையாது. என்றாலும், அவசியச் செலவுகளையே தேவைக்கு அதிகமாகச் செய்து விடுவது என் இயற்கைக் குணமாகிப் போய்விட்டது.

அதன் பலன் —

திருமணமாகி வாழ்க்கையைத் தொடங்கிய கட்டத்திலேயே கடனாளி.

வந்த மனைவி முதல் ஆறு மாதங்கள் அமைதியாக இருந்தாள். நிலைமையைப் புரிந்து கொண்டபோது மெதுவாக நச்சரிப்புத் தொடங்கியது.

என் செலவுகளைத் தணிக்கை செய்ய ஆரம்பித்தாள். ஒவ்வொன்றிலும் எது எது அனாவசியம் என்பதை எடுத்துச் சொல்ல ஆரம்பித்தாள். செலவுகளைக் குறைக்க வேண்டியதன் அவசியம் பற்றி விரிவுரையாற்றத் தொடங்கினாள்.

அவளுடைய பேச்சு எனக்கு எரிச்சலூட்டியது.

''இதப்பாரு, ஒண்ணு மட்டும் தெரிஞ்சுக்க. நாம வாழறது மதுரை. அதுவரைக்கும் சரி. ஆனா வாழ்க்கை சிதம்பரமாத்தான் இருக்கும். இருக்கணும். எதையும் முடிவு செய்ய வேண்டியது நான்தான். புரிஞ்சுதா?'' என்றேன்.

அப்படியும் அவளுடைய நச்சரிப்புகள் குறையாதபோது சொன்னேன்.

''இப்போ நான் சொல்றதுதான் கடைசி. என்னால என் போக்கை மாத்திக்க முடியாது. ஒண்ணு வேணா செய்யலாம். இப்போ என் அம்மாவுக்குத் தருகிற மாதிரி உனக்கும் மாசாமாசம் நூறோ இருநூறோ தருகிறேன். உன் செலவுக்கு வச்சுக்க.''

சற்று நேரம் யோசித்தாள். பின் ஒப்புக் கொண்டாள்.

''சரிங்க. அப்படியே செய்யலாம். மாசம் ரூ.250 கொடுத்துடுங்க. அது போதும். மிச்சத்தை நீங்க என்ன வேணாலும், எப்படி வேணாலும் செலவழிச்சுக்குங்க.''

அந்த ஏற்பாடு என் போக்குக்கு சௌகரியமாக இருந்தது. மதுரையை அமுக்கி சிதம்பரத்தை நிலைநாட்டிய பெருமிதம் என்னை நிறைத்தது.

சுமார் இரண்டாண்டுகள் இந்த நிலை நீடித்தது.

என் செலவுகள் அதிகரித்தன. கடன் பளு அதிகரித்தது. முடிவில் பெரும் சுமையாக அமுத்தத் தொடங்கியது. மூச்சுத் திணறிய நிலையில் மனைவியை அழைத்தேன். கேட்டேன்.

''உன் செலவுக்குக் கொடுத்த பணத்துல எவ்வளவு சேர்த்து வச்சிருக்கே?''

''ஏன்? உங்களுக்கு எவ்வளவு தேவை?'' என்றாள்.

''ரெண்டாயிரம் இருந்தாக் கூடப் போதும். இப்போதைக்குச் சமாளிச்சுக்குவேன்.''

முதலில் எதுவும் இல்லை என்று மறுத்தவள் பின்னர் எட்டாயிரம் ரூபாயை என்னிடம் தந்தபோது திகைத்துப் போய்விட்டேன். இது எப்படி முடிந்தது? அவளே விளக்கினாள்.

நான் கொடுத்த பணத்தை அவள் ஸ்ரீராமில் சீட்டுக் கட்டி வந்திருக்கிறாள். இப்போது அதைத் தள்ளியெடுத்துத் தந்திருக்கிறாள்!

இன்று - என் போக்கு மாறிவிட்டது.

வாழ்வது மட்டுமல்ல, வாழ்க்கையும் மதுரையாகி விட்டது.

— **ஜே. சீனிவாசன்,**
மதுரை-2.

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## கல்கி செப்டம்பர் 10, 20 இதழ்கள்

### பாரதி பிறந்தார் :

தமிழ்நாடு மீண்டும் மகோந்நதத்தை அடையப் போகிறது என்னும் நம்பிக்கை ஊட்டும் காரணங்களில் ஒன்று, இந்நாட்டில் கவி சுப்பிரமண்ய பாரதியார் தோன்றியது; இன்னொன்று, அவரை இக்காலத் தமிழர்கள் சிறந்த முறையில் போற்றிப் பாராட்டுகிறார்கள் என்பது. தமிழ் மொழிக்கும், தமிழ் ஜாதிக்கும் உயிர் இருக்கிறது என்பதற்கு இவை இரண்டும் அத்தாட்சிகள். நாளை 11வ யன்று தமிழ் நாடெங்கும் பாரதியார் ஜயந்தி கொண்டாடுவார்கள். இந்தத் திரு நாளை முன்னிட்டு, நமது மேலட்டையில் பாரதியாரும், அவருடைய குடும்பத்தினரும் அடங்கிய படத்தை வெளியிட்டிருக்கிறோம். பாரதியார் தமது வாழ்க்கைத் துணைவியுடனும், இரு புதல்விகளுடனும் சந்தோஷமாக வாழ்க்கை நடத்திய நாட்களும் உண்டு என்று படத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம். பின்னால் நிற்பவர்கள் இருவரும் குடும்ப சிநேகிதர்கள்; அவர்களைப் பற்றி வேறு விவரம் தெரியவில்லை. ஆனாலும், பாரதியாரின் கஷ்டங்கள் நிறைந்த வாழ்க்கையில் அவருடன் நட்புரிமை பூண்டிருந்தவர்களும் உண்டு என்று அறிந்து ஆனந்தமடைகிறோம். - அட்டைப்பட விளக்கம்




### நான் மட்டுமில்லை!

உபாத்தியாயர் : ஒரு சின்னக் கணக்குப் போடச் சொன்னால் அதில் இவ்வளவு தப்பா செய்வது?

பையன் : அவ்வளவு தப்பும் நான் ஒருத்தன் செய்த பிசகில்லை, ஸார்! எங்க அப்பாவும் கூடப் போட்டார், ஸார்!

- எஸ்.கே. மூர்த்தி. - காலக்ஷேபம்





### சந்தேகம்

"என் ஸ்வாமி! இப்பவெல்லாம் ராகு காலம் எப்போ?"

"அதுதான் யோசனை செய்து கொண்டிருக்கேன். சூரியன் புது மணிப்படி உதிக்கிறானா, பழைய மணிப்படி உதிக்கிறானா என்று புரியவில்லை."

### செப்டம்பர் 1வ.

யுத்த காலத்தை முன்னிட்டு கடிகாரத்தை ஒரு மணி நேரம் முன்னதாக ஓடச் செய்த அரசு உத்தரவையொட்டி சாமா வரைந்த கார்ட்டூன்.



## திரைஹாஸ்யம்

"நாங்கள் அழகாயில்லையா? எங்களில் ஒருவரை நீ ஏன் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது?" என்று அவர்கள் ஆரம்பித்து விடுகிறார்கள்!

"உங்களைப் பார்த்தால் தேவர்களாகத் தோன்றவில்லையே, தேவர்களாயிருந்தால் இந்தக் கெடுமதி தோன்றுமா?" என்று கேட்கிறாள் சுகன்யா!

சுகன்யா சந்தேகப்படுவது போலவே நமக்கும் அவர்களைப் பார்த்தால் தேவர்களாகத் தோன்றவில்லைதான்!

- சதி சுகன்யா விமர்சனம்



## இரண்டாந்தரம்!



**ஸ்ரீ** ஜி.என். பாலசுப்பிரமணியத்தைப் பற்றி அவர் 'முதல்தர வித்வான்' என்று சென்ற இதழில் எழுதிய பிறகு, அடுத்த இதழிலேயே அவரைப் பற்றி இரண்டாந்தரமாக எழுதவேண்டியிருக்குமென்று நான் எதிர்பார்க்கவில்லை. அவர் முதல்தர வித்வான்தான்; நான் எழுதுவதுதான் இரண்டாந்தரம்!

ஜி.என்.பி.யின் சாரீரத்தில் உள்ள ஒரு வசதி வேறு எந்த சங்கீத வித்வானுக்கும் கிடையாது. அவரைப் போல் ரவை புரட்ட யாராலும் முடியாது. இதுவே அவருடைய பெருமையாகவும் குறையாகவும் சில காலத்துக்கு முன்பு வரையில் இருந்தது. அதாவது அவருடைய பாட்டு ஆரம்பத்திலிருந்து கடைசி வரையில் உருட்டலும் புரட்டலுமாகவே இருக்கும். கேட்கும் ரஸிகர்களின் தலைகளும் உருளத்தான் செய்யும். ஆனால், அவரிடம் ஒரு ராகத்தைக் கேட்டுத் திருப்தியடைந்தோம் என்று சொல்ல முடியாமலிருந்தது. இப்போது அவருடைய ரவை சாரீரம் அவருக்குப் பெருமையாக மட்டுமிருக்கிறது; அம்மாதிரி அதைக் கட்டுக்குள் கொண்டு வந்து விட்டார். ராக ஆலாபனம் வெறும் ரவை உருட்டலாயிராமல், உண்மையாக ராக ஆலாபனமாயிருக்கிறது; அதோடு, சிற்சில சமயம் அபூர்வ - அற்புத சஞ்சாரங்களும் வந்து நம்மைப் பிரமிக்கச் செய்கின்றன.

- ஆடல்பாடல் - கர்நாடகம்

## முட்டாள்யோசனை

இங்கிலீஷ் வைத்தியர் : இதற்கு முன் வேறு எந்த வைத்தியரிடமாவது போனீரா?

நோயாளி : ஆமாம்; ஒரு நாட்டு வைத்தியரிடம் கையைக் காட்டினேன்.



இங்கிலீஷ் வைத்தியர் : அந்த முட்டாள் என்ன சொன்னான்?

நோயாளி : உங்களிடம் மருந்து சாப்பிடும்படி கூறினார்! - காலக்ஷேபம்

# மஹாலயம் (அல்லது மஹாளயம்)



பெரிய இருப்பிடம், கல்யாணாதி சுபங்களுக்கு இருப்பிடம் மஹான்களுக்கு இருப்பிடம் என பல பொருள்கள் உண்டு. அதாவது - மஹான்களான பித்ருக்கள் பூமியில் வந்து 16 நாட்கள் தங்கி, புத்ரன் முதலியவர்களுக்கு சுபத்தைச் செய்யும் காலம் என்று பொருள். ஸூர்யன் கன்யா ராசியில் புகுந்தபோது, ஆஷாடம் முதலான 5 ஆவது அபர பக்ஷத்தில் பித்ருக்கள் பூமிக்குச் செல்ல ஏவப்படுகின்றார்கள். அச்சமயம் நமது பெற்றோர், அவர்களது பெற்றோர்களுடன் கூடி நம்மை நாடி வருகின்றனர். அச்சமயம் மஹாளய அன்னச்ராத்தமாகச் செய்வது உத்தமம். இந்த 16 நாட்களில் செய்ய முடியாதவர் அன்ன ச்ராத்தமானால் அடுத்த பக்ஷத்திலும் செய்யலாம்.

தீபாவளி அமாவாஸ்யைவரை பித்ருக்கள் அன்ன ச்ராத்தத்தை எதிர்பார்க்கிறார்களாம். விதிப்படி ஹோமம் செய்து அன்னம் போட முடியாவிடில் அன்னத்திற்கு ப்ரதிநிதியாக வெள்ளி நாணயத்தை அளித்து (அதாவது ப்ராம்மணர்களை வரித்து, ஆஸனாதிகளையும் தக்ஷிணையும் அளித்து) தர்ப்பணம் செய்வதாம். அதே ஹிரண்ய ச்ராத்தம் எனப்படும். அங்ஙனம் பிரதி தினம் செய்ய முடியாதவர் பித்ரு, மாத்ரு திதி அல்லது மஹாபரணி, வ்யதீபாதம், மத்யாஷ்டமீ முதலிய புண்யகாலத்தில் ஹிரண்யம் செய்வது பழக்கம். ச்ராத்த ப்ராம்மணர்களைப் போல் அல்லாமல், ஸாதாரண ஸமாராதனை போல் அன்று அன்னமிடுவது வழக்கம். அதுவும் தற்சமயம் பலவிடங்களில் நடப்பதில்லை. தக்ஷிணை அளித்து அனுப்புவதுடன் நிற்கின்றது. வீணான செலவுகளைக் குறைத்துக் கொண்டு மஹாளயத்தை அன்ன ச்ராத்தமாகச் செய்வதே உத்தமம். ஹிரண்யமாகவாவது செய்து அன்னமிட வேண்டும். 16 நாட்களிலும் தர்ப்பணத்தையேனும் விடாமல் செய்து ஒரு நாளாவது ஹிரண்ய ச்ராத்தம் செய்ய வேண்டும். அதனால் ஸகலவிதமான நன்மையும் பெறவேண்டும்.



# மஹாளயம் செய்வதால் உண்டாகும் பலன்



1. ப்ரதமையில் ச்ராத்தம் செய்தால் தனலாபமுண்டாகும்.
2. த்விதீயை ச்ராத்தம் ஸந்ததியைத் தரும்.
3. த்ரீதீயா ச்ரார்த்தம் நல்ல வரன் அல்லது நல்ல மருமகளைத் தரும். அல்லது கோரிய வரத்தைத் தரும்.
4. சதுர்த்தி ச்ராத்தம் நமது பகைவர்களை அகற்றும்.
5. பஞ்சமீ ஸம்பத்தை உண்டாக்கும்.
6. ஷஷ்டி கர்த்தாவைப் பிறர் பூஜிக்கும்படிச் செய்யும்.
7. ஸப்தமீ பரலோகத்தில் ஒரு தேவ கோஷ்டிக்குத் தலைவனாகச் செய்யும்.
8. அஷ்டமீ உயர்ந்த புத்தியை அளிக்கும்.
9. நவமீ நல்ல மனைவியைத் தரும். துஷ்ட மனைவியை நல்லவளாகச் செய்யும். அடுத்த பிறவியிலும் நல்ல மனைவியைத் தரும்.
10. தசமீ நம் விருப்பத்தைப் பூர்த்தி செய்யும்.
11. ஏகாதசீ ஸகல வேத வித்யைகளையும் தரும்.
12. த்வாதசீ ஸ்வர்ணத்தைத் தரும்.
13. த்ரயோதசீ ஸந்ததி, மேதை, பசு, புஷ்டி, ஸம்ருத்தி நீண்ட ஆயுள் முதலியவைகளைத் தரும்.
14. வஸ்த்ரம் அல்லது அக்னி (தற்காலத்தில் தோன்றிய ரயில், மோட்டார் போன்ற விபத்து) இவைகளால் இறந்தவர்களுக்குச் சதுர்த்தசியில்தான் மஹாளய ச்ராத்தம்செய்ய வேண்டும். அதே அவர்களுக்கு இன்பத்தைத் தரும்.
15. அமாவாஸ்யை ச்ராத்தம் ஸகல இஷ்டங்களையுமளிக்கும்.
16. அடுத்த ப்ரதமை தர்ப்பணம் முன் செய்தவைகளில் உள்ள குறைகளை நீக்கிப் பூர்ணமாகச் செய்யும்.

ஆபஸ்தம்ப ஸூத்ர தர்ப்பண விளக்கம்.

**தமிழ்ப்படங்களுக்குத் தேவைப்படுவது கதாசிரியர் அல்ல. இளையராஜாவும் ஸ்டண்ட் மாஸ்டரும்தான்.**



# மாப்பிள்ளை வந்தாச்சு

அமிர்தம் உண்டிருப்பதைப் போலச் சினிமா உலகை விட்டு அகல மறுக்கும் அதே வில்லன் பாத்திரம் கதையின் அச்சாணி. எதிலும் மாற்றமில்லை. விவசாயிகளுக்குக் கடன் வழங்கி, வெள்ளைத்தாளில் கையெழுத்து வாங்கி, அதைப் பயன்படுத்தி நிலங்களைக் கையகப்படுத்தி, அவரை மீறினால் அவர்களால் வாழ முடியாது என்கிற அச்சத்தைப் புகுத்தி அவர்களை அடிமையாக்கி...

பாத்திரத்தின் தன்மையில் மாற்றம் இல்லாததால் அதனை வெளிப்படுத்தும் நடிப்பிலும் வசனங்களிலும் ஒரு மாற்றத்தையோ, புதுமையையோ எதிர்பார்த்தால் அது நம்முடைய தவறு.

இல்லையில்லை, ஒரேயொரு மாற்றம். அது - ஒரு பெண்ணை அடைந்தே தீருவேன் என முடிவு செய்யும் போது வழக்கமாக அந்த வில்லன் கூறும் சங்கேத வார்த்தை. படம் தவறாமல் மாற்றமடையும் அந்த வசனம் இந்தப் படத்தில் -

''சட்டையைக் கழட்டப் போகிறேன்''

பொருள்? அந்த வில்லனுக்கே வெளிச்சம்!

இத்தகைய கொடுமைக்காரனின் மனைவியாக இடம் பெற்றுக் கடைசிவரை கண்ணீர் விடுவது - அதிலும் மாற்றமில்லாமல் ஸ்ரீவித்யாதான். வீணாகிக் கொண்டிருக்கும் நடிப்பாற்றல்.

வழக்கம் போல, பல ஆண்டுகளுக்கு முன் இந்த வில்லனின் கொடுமை காரணமாகச் சிதறுண்டு போய்விட்ட பெற்றோரின் வாழ்க்கை இடைவேளைக்குப் பின் கதாநாயகனுக்குத் தெரிய வர, அவன் பொங்கியெழுந்து வில்லனுக்கு எதிரான நடவடிக்கைகளில் ஈடுபட.... சுபம்.

ஒரே ஆறுதல், பாத்திரமறிந்து நடித்திருக்கிறார் ரகு (என்கிற ரகுமான்).

வித்தியாசப்படுவது ஒன்றே ஒன்றுதான், அது -

சினிமா பாஷையில் சொல்வது என்றால், கௌதமியின் 'டிராக்'.

அவர் யார், எதற்காக அந்தக் கிராமத்துக்கு வந்து சேருகிறார் என்கிற சஸ்பென்ஸைக் காப்பாற்றியிருப்பவர் இயக்குநர்.

ஒன்று மட்டும் நிச்சயமாகத் தெரிகிறது.

தமிழ்ப்படங்களுக்குத் தேவைப்படுவது கதாசிரியர் அல்ல. இளையராஜாவும் ஸ்டண்ட் மாஸ்டரும்தான்.

- சி. ஆர். கே.

# பாட்டும் ஜாக்பாட்டும்!

முடிந்த நிலையில் இருந்த ஹீரோ - 72 படத்தை வடஇந்திய விநியோகஸ்தர்கள் உடனே ரிலீஸ் செய்யுமாறு எனக்கு "பிரஷர்" கொடுத்தார்கள். "கவலைப்படாதீர்கள்; படம் நன்றாயிருக்கிறது. பிரமாதமாக ஓடும். தமிழ்ப் படத்தின் ரிசல்ட் இதனால் நிச்சயம் பாதிக்கப்படாது" என்று தைரியம் அளித்தார்கள்.

எனக்கு உள்ளூர டென்ஷன் இருந்த போதிலும் வேறு வழி தெரியாததால் பட ரிலீஸுக்கு நான் குதித்தேன். நன்றாகவே ஓடியது. மிகப் பெரிய அளவில் லாபம் சம்பாதித்துத் தரவில்லை என்றாலும் சித்ராலயாவுக்கு இருந்த நிதி நெருக்கடியிலிருந்து ஓரளவுக்கு மீண்டு வர உதவியது.

தமிழ்ப் படம்தான் தொங்கலில் இருந்தது! சிவாஜிக்கும், அவரது கால்ஷீட் விவகாரங்களைக் கவனித்து வந்த அவர் சகோதரர் சண்முகத்துக்கும் என் நிலைமை நன்றாகத் தெரியும். ஆனாலும் சிவாஜியின் கால்ஷீட்டை அட்ஜெஸ்ட் செய்து தர முடியாத நிலை. நான் கைகளைப் பிசைந்து கொண்டு நின்றிருந்தேன். இந்தச் சமயம் பார்த்து சிவாஜி ஒரு படப்பிடிப்புக்காக சிங்கப்பூர் வேறு கிளம்பி விட்டார்!

தம்பி ஷண்முகம் என்னிடம், "சிங்கப்பூரிலிருந்து திரும்பியதும் உங்களுக்கு எப்படியும் கால்ஷீட் தேதிகள் அட்ஜஸ்ட் பண்ணிக் கொடுத்துடலாம். அண்ணன் சொல்லிட்டாரு. சிங்கப்பூர் கிளம்பறதுக்கு முன்னாடியே தேதிகளைச் சொல்லிடறேன். நீங்க அதற்கு ஏற்ப மற்ற ஏற்பாடுகளையும் செய்து விட்டுத் தயாராக இருக்கலாம்" என்றார். இருட்டில் தடுமாறித் தவித்தவனுக்குக் கையில் விளக்குக் கொடுத்தது போலிருந்தது அவர் பேச்சு.

ஆனால் என்னுடைய துரதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். சிவாஜியும் தம்பி ஷண்முகமும் சிங்கப்பூர் சென்று விட்டார்கள். எனக்கு கால்ஷீட் தரவில்லை. ஏன் இப்படி நடந்தது என்று எனக்குப் புரியவும் இல்லை. சிங்கப்பூர் புறப்பட்டுப் போகிற அவசரத்தில் என் விஷயத்தை அடியோடு மறந்து விட்டார்களோ என்னமோ!

என்னுடைய ஹிந்தி படங்களுக்கெல்லாம் வசனம் எழுதியவர் ராஜேந்திர கிருஷ்ணன். ஜெமினி போன்ற பல பெரிய நிறுவனங்களின் ஹிந்தி படங்களுக்கும் அவர்தான் வசனம் எழுதுவார். நல்ல கவிஞரும் கூட. என் படத்துக்குப் பாடல்கள் எழுதும் பொறுப்பையும் அவரிடம் நான் ஒப்படைப்பதுண்டு. என்னுடைய "கெகரி சால்" படத்தின் இசையமைப்பாளர் லக்ஷ்மிகாந்த் பியாரிலால் ரொம்ப பிஸி. எனக்கோ அவசரமாக ஒரு பாடலை



● ஹீரோ - 72ல் ஒரு காட்சி

இசையமைக்க வேண்டியிருந்தது.

போன் செய்த போது, லக்ஷ்மிகாந்த், "ஒரு பாடல்தானே அவசரத் தேவை? பம்பாய் வந்து விடுங்கள். விகவேஷனைத் தெரிந்து கொண்டு என் நேரத்தை அட்ஜஸ்ட் செய்து உங்களுக்கு ஒரு டியூன் போட்டுத் தந்து விடுகிறேன்" என்றார். பாடலாசிரியரும் உடன் இருக்க வேண்டுமே! எனவே அடுத்து, ராஜேந்திர கிருஷ்ணனுக்கு ஃபோன் செய்தேன், நான் பம்பாய் வர விருப்பதைத் தெரியப்படுத்த. எனக்குக் கிடைத்த செய்தி என்னை வியப்பில் ஆழ்த்தியது. அது, ராஜேந்திர கிருஷ்ணன் சென்னையில்தான் இருக்கிறார் என்பது!

உட்லண்ட்ஸ் ஹோட்டலில் அவர்

டைரக்டர் ஸ்ரீதர்



''இனி நீங்க புனை பெயர்ல கதை எழுதாதீங்க!''

''ஏன் சார்?''

''பெயராவது ஒரிஜினலா இருக்கட்டுமேன்னுதான்!''

– எஸ். முகம்மது யூசப்

குடும்பத்துடன் தங்கி இருந்தார். போய்ப் பார்த்தேன். ''என்ன இப்படி, சொல்லாமல் கொள்ளாமல்...? ஏதாவது படத்துக்கு ஓர்க் பண்ணுகிறீர்களா?'' என்று கேட்டேன். அவர் கூறிய பதில் என்னை மேலும் வியப்பிலாழ்த்தியது! அப்படி அவர் என்ன பதில் சொன்னார் தெரியுமா?

''பம்பாய் ரேஸ் மைதானத்திலிருந்து தப்பிப்பதற்காகச் சென்னை வந்திருக்கிறேன்!'' என்றார்.

இந்த இடத்தில் சிறிது விளக்கம் தேவை. ராஜேந்திர கிருஷ்ணன் ஒரு ரேஸ் பிரியர். 'ரேஸ் பைத்தியம்' என்று கூடச் சொல்லலாம். சம்பாதிப்பதையெல்லாம் குதிரைப் பந்தயத்தில் கோட்டை விட்டு விடுவார். எத்தனை நஷ்டப்பட்டாலும் அதைத் திரும்ப எடுத்து விடலாம் என்று எண்ணியே மறுபடியும் மறுபடியும் ரேஸுக்குப் போவார்! இப்போது இரண்டு முறை ஜேக்பாட்டில் பணம் கட்டி இரண்டு தடவையும் யாரும் ஜெயிக்காமல் போக, பரிசுப் பணம் மொத்தமும் மூன்றாவது ஜேக்பாட் ரேஸ் பரிசுப் பணத்துடன் சேர்ந்திருந்தது. மிகப் பெரிய தொகை! இதற்குள் ஏகப்பட்ட நஷ்டம் அடைந்திருந்த ராஜேந்திர கிருஷ்ணனோ, இந்தக் கவர்ச்சியிலிருந்து விடுபட்டு மீண்டு வர சென்னை வந்திருக்கிறார்!

''நான் பம்பாயிலிருந்தால் ஜாக்பாட் ஆடாமல் இருக்க மாட்டேன். கையிலோ பணமில்லை. கடன் வாங்கியாவது ரேஸுக்குப் போவேன். அதைத் தவிர்க்கத்தான் சென்னை வந்து விட்டேன். இந்த 'ஜாக்பாட்-பூல்' ஆடாமல் தப்பினால் குதிரைப் பந்தய மோகத்திலிருந்தே விடுபட்டு விட முடியும் என்று எனக்குத் தோன்றுகிறது. அதனால்தான் குடும்பத்துடன் இங்கு வந்து விட்டேன்'' என்றார்.

அவரிடம் எனக்குப் பரிவு ஏற்பட்டாலும் நான் என் நிலைமையையும் எண்ணிப் பார்க்க வேண்டுமில்லையா? அதை விளக்கிய போது ராஜேந்திர கிருஷ்ணன், ''ஒன்று வேண்டுமானால் செய்யுங்கள், லக்ஷ்மிகாந்த் பியாரிலாலை இங்கே தருவித்து விடுங்கள். இங்கேயே நாம் மூவருமாக உட்கார்ந்து முடித்து விடலாம்'' என்றார்.

நான் திரும்பவும் லக்ஷ்மிகாந்துடன் ஃபோன் தொடர்பு கொண்டு பிரச்னையை விவரித்தேன். அவரோ, ''இங்கே எனக்கு வேலை 'டைட்'டாக இருக்கிறது. எப்படியாவது ராஜேந்திர கிருஷ்ணனை 'கன்வின்ஸ்' பண்ணி அழைத்து வந்து விடுங்கள்'' என்றார்.

கவரில் அடித்த பந்தாக நான் திரும்பவும் ராஜேந்திர கிருஷ்ணனிடம் வந்தேன். அவரோ, ''நான் பம்பாய் வந்தால் ஜாக்பாட் ஆடாமல் இருக்க மாட்டேன்! ஆடா விட்டால் என் மண்டையே வெடித்து விடும்! என்னிடமோ பணம் இல்லை'' என்று அழாத குறையாகப் பேசினார்.

நான் என்ன செய்வது என்று யோசித்து வேறு வழியில்லாமல் ஒரு முடிவெடுத்தேன். ''சரி, உங்களுக்குப் பாடல்களுக்காகப் பேசிய தொகை தவிர, ஐயாயிரம் ரூபாய் தருகிறேன். என்னுடன் பம்பாய் வந்து ரேஸ் ஆடுங்கள். உங்களுக்குச் செலவு இல்லை. தோற்று விட்டால் டென்ஷனும் தீர்ந்து விடும். பிறகு லக்ஷ்மிகாந்த் பியாரிலாலுடன் சேர்ந்து உட்கார்ந்து பாடல் வேலையை முடித்து விடலாம்'' என்றேன். அவர் இந்த யோசனையை ஏற்றுக் கொண்டு உடனே புறப்பட்டார்.

சனிக்கிழமை சித்ராலயா கோபுவும்

## பார்சிலோனா பிரார்த்தனை!

பார்சிலோனா ஒலிம்பிக்ஸில், அம்பயர்கள் கொடுத்த சில 'டெக்னிகல்' அபிப்பிராயங்களை ஒப்புக் கொள்ள முடியாத அமெரிக்க வாலிபால் குழுவினர் தங்கள் எதிர்ப்பைத் தெரிவிக்க ஒட்டுமொத்தமாகத் தலையை மொட்டை அடித்துக் கொண்டார்கள்!

நன்றி : வீக்

தகவல் : கிருஷ்ணவேணி ரங்கநாதன்



ராஜேந்திர கிருஷ்ணனும் பம்பாய்க்குப் பறந்தார்கள். நான் ஞாயிற்றுக் 'கிழமை போய்ச் சேர்ந்தேன். ஹோட்டலை நான் அடைந்த போது அங்கே எனக்காக, ராஜேந்திர கிருஷ்ணன் தயாராகக் காத்திருந்தார்! அவர் கரங்கள் பணத்தை வாங்கப் பரபரத்தன.

''ராஜேந்திர கிருஷ்ணன்! நான் கூடச் சென்னை ரேஸ்' கிளப்பில் அங்கத்தினன் தான். ஆனால் ஒரு தடவை கூட குதிரை மீது பணம் கட்டியதில்லை. இன்று கூட என் மனச்சாட்சிக்கு விரோதமாகத்தான் இந்தக் காரியம் செய்கிறேன். எனக்கு நாளைக்குப் பாட்டுப் பதிவாக வேண்டும். அந்த ஒரே காரணத்துக்காகத்தான்...''

''ரொம்ப தேங்க்ஸ்'' என்று கூறிப் பணத்தைப் பெற்றுக் கொண்ட ராஜேந்திர கிருஷ்ணன், ''எந்த ஜாக்பாட் ரேஸிலிருந்து நப்ப நினைத்தேனோ அதற்கே போகிறேன்! எனக்குத்தான் அதிர்ஷ்டமேயில்லை; மேலே மேலே தோல்வி, நஷ்டம். இப்போ உங்க பணத்தை ஆடறேன்; உங்க அதிர்ஷ்டம் எப்படி பார்க்கலாம்!'' என்று கூறிவிட்டு அவசரம் அவசரமாக விடை பெற்றுக் கொண்டார்.

''நாளைக்குப் பாடல் டியூன் போட்டாகணும், மறந்துடாதீங்க!'' என்று விரைந்து கொண்டிருந்தவர் காதில் விழ உரக்கக் கூறினேன்.

பின்னர் லக்ஷ்மிகாந்த் பியாரிலாலுக்கு ஃபோன் போட்டேன். ''காலையில் வாங்க; வேலையை முடித்து விடலாம்'' என்றார் அவர்.

இரவு ஏழு மணி சுமாருக்கு, கோபுவிடம், ''ராஜேந்திர கிருஷ்ணனுக்கு ஃபோன் போடு'' என்றேன். ''ரேஸ் கோர்ஸுக்குப் பக்கத்தில்தான் அவர் வீடு; பணத்தை இதற்குள் ஒழித்துக் கட்டி விட்டுத் திரும்பியிருப்பார். நாளைக் காலை ஒன்பது மணிக்கு லக்ஷ்மிகாந்த் பியாரிலாலுடன் உட்கார்ந்து கம்போஸிங்கை முடிக்கிறோம் என்பதைச் சொல்லி விடு'' என்றேன்.

கோபு டயல் செய்ய, மறுமுனையில் ஒரு குரல் ''ஹலோ'' சொன்னது. இன்னாரிடமிருந்து ஃபோன் என்று தெரிந்து கொண்டதும் அந்தக் குரலுக்குரியவர், ''நேரே இங்கே வாங்க; சீக்கிரமா வாங்க'' என்று பரபரப்புடன் கூறி ரிஸீவரையும் வைத்து விட்டார்!

கவலையும் குழப்பமுமாக கோபுவும் நானும் டாக்ஸி ஏறி விரைந்தோம்!

புகைப்படம் உதவி : பிலிம் நியூஸ் ஆனந்தன்



# பப்பாளிக்குள் பிள்ளையார்!

### மந்திரக்காளி!

எந்த விதமான மேஜிக் வித்தைகளுக்கும் தேவையான சாமான்கள் இந்தியாவில் ஒரே ஒரு இடத்தில்தான் கிடைக்கும். அது தான் பம்பாய் தாதர் பகுதியிலுள்ள ஆனந்த் தயாடேயின் கடை. பொழுது போக்காக மேஜிக் கற்பவர்களும் சரி, அதையே தொழிலாகக் கொண்டவால், சர்க்கார் போன்றவர்களும் சரி, இந்தக் கடையில்தான் தங்களுக்கு வேண்டிய சாமான்களை வாங்குகிறார்கள் என்று பெருமையாகக் கூறுகிறார் தயாடே.

### ரேஷன் கார்டில் பிரிவினை

மஹாராஷ்டிராவில் இரு தர ரேஷன் கார்டுகள் முறை அமல் செய்யப்படவுள்ளது. இதன்படி 20,000 ரூபாய்க்கு மேல் வருட வருமானம் உள்ளவர்களுக்குச் சர்க்கரை, கெரோஸின், பாமாயில் இவை மட்டுமே தரப்படும். மைதா, கோதுமை போன்றவை இவர்களுக்குத் தரப்படமாட்டாது. இதனால் அரசுக்குக் கணிசமான சேமிப்பு இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

### ஊழலின் மதிப்பு!

ஸ்டாக் எக்ஸ்சேஞ் ஊழலினால், 4,000 கோடி நஷ்டம் என எல்லோருக்கும் தெரியும். ஆனால், இதனை வெறும் எண்ணாக மட்டுமே எல்லோரும் கணிக்கின்றனர். பம்பாயைச் சேர்ந்த அனில் கோட்டே, 4,000 கோடி ரூபாயால் என்னென்ன சாதிக்க முடியும் என்று பட்டியலிட்டுள்ளார் : 1) மஹாராஷ்டிர மாநில விவசாயிகள் அனைவரது கடன்களையும் மூன்று தலைமுறைகளுக்குத் தீர்க்கலாம். (அல்லது) 2) உபரியாக 1.2 கோடி ஹெக்டேர் நிலத்தைச் சாகுபடி செய்யலாம் (அல்லது) 3) 25 லட்சம் கிணறுகள் தோண்டியிருக்கலாம். (அல்லது) 4) 200 கூட்டுறவு சர்க்கரை ஆலைகள் நிர்மாணித்திருக்கலாம் (அல்லது) 5) 10,000 கிராமங்களுக்குக் குடிநீர் வசதி செய்து கொடுத்திருக்கலாம் (அல்லது) 6) இந்தியாவில் ஆரம்பிக்கப்பட்ட எல்லா இரயில்வே நிர்மாண வேலைகளையும் முடித்திருக்கலாம் (அல்லது) 7) 10 லட்சம் குடும்பங்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுத்திருக்கலாம் (அல்லது) 8) 10 லட்சம் பேர்களுக்குப் புதிய வேலைகள் கொடுத்திருக்கலாம்.

### பப்பாளிக்குள் பிள்ளையார்!

பாமர மக்கள் சாரி சாரியாக ஐந்து நட்சத்திர ஓட்டலுக்குப் போவதைப் பார்க்க வேண்டுமா? அப்படியானால் பம்பாயின் வெளிநாட்டு விமான நிலையமான 'சஹார்' அருகில் உள்ள 'லீலா கெம்பின்ஸ்கி' ஓட்டலுக்கு வாருங்கள். கணேஷ் சதுர்த்திக்கு ஒரு வாரம் முன்பு ஓட்டலின் பிரதம சமையல்காரர் சூரி, ஒரு பப்பாளிப் பழத்தை வெட்டும் போது, அதில் விதையில்லாமல் வேறு ஏதோ நீட்டிக் கொண்டிருக்கக் கண்டார். அதனை நாசூக்காக வெட்டியபோது அதனுள் ஒரு பிள்ளையார் வடிவம் இருக்கக் கண்டார். உடனே செய்தி காட்டுத் தீயாகப் பரவி ஜனங்கள் வர ஆரம்பித்தனர். ஓட்டல் அதிகாரிகள், ஓட்டலின் பின்னால் புதிதாகக் கட்டிக் கொண்டிருக்கும் ஒரு கட்டடத்தில் இந்த உருவத்தை மக்களின் பார்வைக்கு வைத்தனர்!

### ஒரு மொழி - ஐந்து முகங்கள்.

சமீபத்தில் கொங்கணி மொழி இந்திய மொழிகளுள் ஒன்றாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது. இந்தியாவில், ஏன், உலகத்திலேயே ஐந்து லிபிகளில் எழுதப்படும் ஒரே மொழி கொங்கணியாகத்தான் இருக்கும். ரோமன், தேவநாகரி, கன்னடம், மலையாளம், உருது என ஐந்து லிபிகளில் கொங்கணி எழுதப்பட்டு வருகிறது.

- அம்ருதா பார்த்தசாரதி

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, எக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka